# The Viveka Chintamani

## A Monthly Tamil Magazine and High Thought Review.

Devoted to the Diffusion of Practical Truth and Knowledge and to the "Children's Movement."

**Dealing with the Principles of Education, Psychology, Soul-culture, and Ethics.**
**Adapted for Use in Homes and Schools**


**God is Love : Knowledge in power : AUM.**
**"Love and Learn"**—"ஓதுவதொழியேல்."
SATYAMEVA JAYATE.


## Vol. XXI.

*(For the Tamil Year Pramateesa)*

***April 1913-March 1914.***

# விவேக சிந்தாமணி.

*அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.*


அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.


21-ம் புத்தகம்.

(பிரமாதீச௵)
1913-௵ எப்ரல்௴ முதல் 1914-௵ மார்ச்சு௴ வரை.

PUBLISHED BY

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
**For The Lalita Publishing Co., (Sole Agents and Managers,)**
**Lalitalaya, 19, Adam St, Mylapore Madras, S.**

**1913-1914.**

**Bound Vol. Rs. 5.]** **[Unbound Vol. Rs. 4.**

# *TABLE OF CONTENTS.*

## Vol XXI (April 1913-March 1914)

---

### No. 1. For APRIL 1913.



### 1913௵ ஏப்ரல்௴ 1-வது சஞ்சிகை.



### No. 2. For MAY 1913.

## 1913ஸ்ரீ மேமூ 2-வது சஞ்சிகை.



## No. 3. For MAY 1913.

CHILDREN'S SPECIAL: H. E. Lord Hardinge's Birthday.



## 1913ஸ்ரீ ஜூன்மூ 3-வது சஞ்சிகை.

ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தி: விசேஷப்பதிப்பு.

## No. 4. Fro JULY 1913.



## 1913௵ ஜூலை௴ 4-வது சஞ்சிகை.



## No. 5. For AUGUST 1913.

## 1913௵ ஆகஸ்டு௴ 5-வது சஞ்சிகை.



## NO. 6. For SEPTEMBER 1913.



## 1913௵ செப்டம்பர்௴ 6-வது சஞ்சிகை.

## No. 7. For OCTOBER-NOV 1913.



## Nos. 8 & 9. For NOVR-DECEMBER 1913.



## 1913ஹு நவம்பர் டிசம்பர்மூ 8 & 9-வது சஞ்சிகை.

## No. 10. For JANUARY 1914.



## 1914ஞ் ஜனவரிமூ 10–வது சஞ்சிகை.



## No. 11. For FEBRUARY 1914.

### The Inculcation of Ideals of Social Service.

## 1913ளு பிப்ரவரிமூ 11-வது சஞ்சிகை.

### ஸமஷ்டி சேவை ஸாதன போதம்.



## No. 12. For MARCH 1914.



## 1914ளு மார்ச்சுமூ 12-வது சஞ்சிகை

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE.




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power:*Aum*

ஸத்தியமே ஜெயம்— **SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] **1913**ஸு மேமீ, பிரமாதீசஸு வைகாசிமீ [சஞ்சிகை. 2.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.
S Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷபார்ப்பணஞ் செய்யல்வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசித்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேயுரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவா பாடஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே திருஞன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானுடமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்

விவேக  சிந்தாமணி

## Speak the Truth in words of Love.

"Little words of Kindness,
Little words of Love,
Make our earth a garden
Like the heaven above."

### "ஸத்யம்வத ப்ரயம்வத"

—:o:—

"ஸத்யம் ப்ரூயாத் ப்ரயம் ப்ரூயாந்நப்ரூயாத் ஸத்யம்ப்ரயம்."—"ஸத்யத்தையே பேச வேண்டும்; ப்ரயத்தையே பேசவேண்டும். ஸத்யமாக விருந்தாலும் அப்ரியமான ஒரு வாக்யத்தை ஒரு பொழுதும் பேசக்கூடாது."

"ஸத்யம்வத" என்று சொன்ன சுருதி "ப்ரியம்வத" என்றும் கூறியுள்ளது. ஸத்யத்தைச் சொல் என்றதனல் அப்ரியமான வார்த்தைகளைச் சொல்லச் சொன்னதாக அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது. ஆனல் "உள்ளதைச் சொன்னல் நொள்ளக் கண்ணிக்கு நோப்பாளம்" என்கிற வெகுஜன வசனமிருக்கிறதே; அந்தப்படி அநேகர் உண்மையைச் சொன்னல், நமது குட்டை வெளியிட்டு விட்டான் பார்த்தையா! வென்று மனம் நொந்து போகிறார்கள் என்பது லோகானுபவத்தில் உண்மையாகத்தானே யிருக்கிறது. இப்படிப்பட்டவர்களை மனநோகச் செய்யாமலிருப்பது எப்படி? யென்று கேட்கலாம். அந்தக் கேள்விக்கு பதிலாகத்தான் "ஸத்யமாக விருந்தாலும் அப்ரயமான ஒரு வாக்யத்தை ஒரு பொழுதும் பேசக்கூடாது" என்று சொன்னது.

டியூக் ஆவ் வெல்லிங்டன் சீக்காயிருந்த பொழுது ஒரு பிரபலமான டாக்டர் அவருக்கு தப்பான மருந்து ஒன்றைக் கொடுக்கும்படி வைத்தியம் சொல்ல, அதனல் அவருக்குப் பிரமாதமான தேகஹானி நேரிட்டு விட்டது. டாக்டர் செய்தது முட்டாள்தனமென்று அவருக்கு நன்றாகத்தெரிந்து விட்டது. அதன் மேல் அந்த டாக்டர் தான் செய்த தப்பிதத்தை ஒப்புக்கொண்டு அதை வெளியிட்டால் தன் பிழைப்புக் கெட்டுப்போமென்று சொல்லி அவரை வெளியிடாதபடி மறைத்து வைக்கக் கேட்டுக் கொண்டார். வெல்லிங்டன் பிரபு அதைப்பற்றி யாரிடமும் பேசுவதில்லை யென்று உடனே வாக்குக் கொடுத்தார். அது கேட்ட டாக்டர் தைரியங் கொண்டு தான் வழக்கம் போல் அவருக்கு வைத்தியம் செய்து வர அனுமதி தர வேண்டுமென்றும், இல்லாவிட்டால் ஜனங்கள் சம்சயிப்பார்களென்றும் தெரிவித்துக் கொண்டார். அதற்கு வெல்லிங்டன் பிரபு உடன்பட முடியாதென்று சொல்லிவிட்டார். ஏனெனில் அது பொய்வேஷம் போடுவதற்கு இடம் கொடுப்பதாகுமென்று சொன்னார்.

உண்மையை அப்ரயமான வசனங்களால் வெளியிட வேண்டாம்: பிரியம் தர மெய் பேச முடியாவிட்டால் 'மௌனம் கலக நாஸ்தி' யென்று சும்மாவிருந்து விடலாம். ஆனல் சில சமயங்களில் அப்படி யிருப்பது பொய் வேஷத்துக்கு இடந்தருவதாக முடியும். அப்படிப் பட்ட சந்தர்ப்பங்களில் அதற்கு இடங்கொடுக்கக் கூடாது. "ஸத்யமானலும் அப்ரயமான வசனத்தை ஒருபோதும் பேசக்கூடாது." என் எனில், அதனல் பிரயோசனமில்லை. அப்ரியமான வசனத்தால் கேட்பவர் மனம் கோணினல் ஸத்யத்தை யுணரும் சக்தியவர்களுக்கு இல்லாமற் போகிறது. அந்த நிலையில் உண்மையைப் பேசுவதால் பிரயோசனமில்லாமற் போகிறது. பிரயோசனமில்லாமை மட்டுமில்லை. துன்பமும் துக்கமுங்கூட நேரிடும். மனங் கோணச் சொல்லும் உண்மை உள்ளபடி மனத்

திலேருமையால், அதைப்பற்றி விகல்பம் செய்ய நேரிடுகிறது. வீண் விகல்பத்தால் நேரிடும் துன்பங்கள் அனந்தம். வாக்கின் அர்த்தம் கெட அநர்த்தம் செய்து கொண்டால் அதனால் விளையும் அநர்த்த பரம்பரைக்கு முடிவில்லை. ஆகையால், புத்திமான் ஸத்ய விருதத்தை யனுஷ்டிப்பதில் ப்ரயவசனத்தையே உபயோகிக்க வேண்டும். அப்பிரியமான வசனத்தை உபயோகிக்கக் கூடாது. அதனால் வீண் வைஷம்யம் விளைவதன்றி வேறு பிரயோசனமில்லை. ஆகையால் ஸத்ய விருத மனுஷ்டிப்போர் அதோடு பிரயவசனம் பேசுவதையும் ஒரு விருதமாக அனுஷ்டிக்க வேண்டும். அப்படி யென்றால் ஆஷாடபூதி கதையாக உண்மையை ஒளிக்க வேண்டுமென்பது அர்த்தமல்ல. உண்மையை ஒளிக்க முடியாது. உண்மையை ஒளிப்பது எதுவோ அதுதான் பொய். பொய் பேசுதல் ஒருபோதும் கூடாது. "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் வெளியாகிவிடும்" என்பது பழமொழி. இது ஸத்யம். உண்மையும் எவ்விதமாகவோ வெளியாகிவிடும். அந்த சக்தி அதற்கு தானாக வுண்டு. ஆகையால்தான் அப்ரியமான வசனங்களை அதன்பொருட்டு உபயோகிக்க நிமித்தமில்லையென்று சொன்னது. ஹிதோபதேசத்தால் ஆகும் நன்மை குரூரோபதேசத்தால் ஆகாது. சில குழந்தைகளிடம் பழகுவோர் அவர்கள் ஹிதமாய்ச் சொல்லும் நய வசனங்களுக்கு மிகவும் கட்டுப்பட்டவர்களாகவிருக்க அப்ரியமான குரூரவார்த்தைகளைக் கேட்கவும் பொறுக்காது அழுகிறதை அனுபவத்தில் கண்டிருக்கலாம். இது நிர்மலமான மனசின் ("குழந்தைமனம்" என்பது இதையே) ஸ்வபாவம். மனோபாவமறிந்து பேசத்தெரியாதவன் பேச்சுப் பிரயோசனமற்றதாம். வார்த்தை ஜடம்: அதன் அர்த்தம் தான் அதற்கு சித்தன்மையைக் கொடுக்கிறது. அறிவுக்கும் வாக்குக்கும் இடையே அவ்விரண்டுக்கும் ஸம்பந்தியாக விருப்பது மனசு. ஸம்பந்திவிரோதமாகாதாகையால் அந்த ஸ்தானத்திலிருக்கும் மனம் நோகச் செய்யக்கூடாது. ஆகையால் மனநோக்கமறிந்து பேசவேண்டும்; மனநோக்கமறிந்து பேசும் பேச்சு எப்போதும் ஹிதத்தைக் கொடுக்கும். மனநோக்கமறியாமற் பேசும்பேச்சுத்தான் அஹிதத்தை யுண்டுபண்ணும். அன்பும் ஸத்யமும் வேறல்ல. அன்புருவே ஸத்யமாயிருப்பதால்தான் தேவிக்கு ஸத்யாநந்த ஸ்வரூபிணி யென்கிற இரகஸியநாமம் விதிக்கலாயிற்று. அன்புருவாயிருக்கும் ஸத்யத்தை அப்ரியமான வசனத்தால் வெளியிடுவது சரியல்லவே. ஸத்யம் நெருப்பு: அந்த அக்னியை யாராலும் அணைத்துவிட முடியாது. ஆகையால் அதைக் கையாள்கிறவர்கள் "மடியில் நெருப்புப்போல்" சாந்தோபசாந்தமா யிருந்து பேச வேண்டும். அப்பொழுதுதான் அதற்கு வீரியம் அதிகம். அக்னிகளிலெல்லாம் ஸமுத்ர ஜலத்திலிருக்கும் வடவாமுகாக்நி உஷ்ணதிக்கம் மிகுந்ததாயிருப்பதுபோல, ப்ரியவசனத்தால் எடுத்தாளப்படும் ஸத்யம் மனதைக் கவர்ந்து அதன் அழுக்கைப் போக்கும் சக்தி மிக வாய்ந்ததாக விருக்கும். ஆகையால் ஸத்யத்தை ப்ரியவசனங்களாலேயே சொல்ல வேண்டும். அன்பு நிறைந்த ஹிருதய முண்டானால் ப்ரியவசனம் தானாகப் பிறக்கும்.

அன்றி ப்ரியவசனங்களால் ஹிருதயம் மலர்கிறதுபோல அப்பிரியமான வசனங்களால் மலராது. அப்பிரியமான வசனங்களால் ஹிருதயம் குவியும். ஹிருதயகமலம் குவிந்தால் அறியாமையாகிய இருள் வந்து மூடிக்கொள்ளும். ஆகையால்தான் "வர்மமப்பா வெல்வதில்லை; வாயாலொன்று மாவதில்லை" யென்று தேவி வாக்கும் பிறந்திருக்கிறது. "மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்னும் சுருதி வாக்கு ஸத்யம்; ஆனால் அப்பிரியமான வார்த்தைகள் சேர்வதால் வர்மம் ஜனிக்கலாகிறது. வர்ம

ப்பா வெல்வதில்லை!'' ஆதலால் பிரிய வசனங்களாலேயே உண்மையைப் பேசு! அப்பிரியமான வசனங்களைக் கனவிலும் உபயோகிக்க வேண்டாம்.

———:++:———

## Gurukula and its Ideal.*

## ஹரித்வாரத்தில் ஸ்தாபித்துள்ள குருகுல வித்யாச்ரமும் அதன் லக்ஷியமும்.

———:(*):———

ஹிமாலயத்திலே கங்காநதி தீரத்திலுள்ள ஹரித்வாரம் என்னும் புண்ய க்ஷேத்திரத்தில் ஸ்வாமி தயாநந்த ஸரஸ்வதி யவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட ஆரிய ஸமாஜத்தாரால் ஏற்படுத்தப்பட்ட குருகுல வித்யாச்ரமம் ஒன்று இருக்கிறது. அதன் தலைவர் மஹாத்மா முன்ஷிராம் அவர்கள். இந்த வித்யாசாலையில் படிக்கிற மாணவர்கள் பழைய சம்பிரதாயத்தை யனுசரித்து 7-8 வயதில் குருகுலவாசம் செய்து வித்யாசிக்ஷை பெற்றுவரல் வேண்டும். பிரதம வித்தை, அதற்கு மேற்படியிலுள்ள ஸ்கூல் வித்தை, காலேஜ் வித்தையெல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்கள். இந்த வித்யாச்ரமத்தில் குருகுலவாசம் செய்துவருகிற சிஷ்யப்பிள்ளைகள் அவர்கள் வித்தை முடிகிறவரையில் அந்த வித்யாச்ரம அதிகாரிகள் மேன்பார்வையிலேயே யிருக்கவேண்டும். ப்ரஹ்மசாரியவிருதம் அனுசரிக்கவேண்டும். குருசிசுருஷை செய்து வித்யாதீக்ஷை பெறவேண்டும். இப்பொழுதுள்ள வித்யாலயங்களும், விடுதிகளும், மாணவர் வசிக்குமிடங்களும் ஆதியில் கடாந்தகாரமாயிருந்தது. அந்நிலத்தைக் காடழித்துப் பண்படுத்தி இப்பொழுது அதிநேர்த்தியான வித்யாலயமாகச்செய்து திருத்தியிருக்கிறார்கள். பிள்ளைகளுக்கு பி. ஏ. பரீக்ஷை வரையில் உள்ள படிப்புச்சொல்லிக் கொடுக்கப்படுகிறது. ஆனால் குணமே பிரதானமாய்க் கருதி வித்யாபிவிருத்தியெல்லாம் ஆத்மக்ஷேமத்துக்குக் காரணமாகவிருக்கும்படி ஓதிவருகிறார்கள். பிள்ளைகள் திறந்த வெளியில் ஓடி விளையாடி தேகப்பயிர்ச்சிக்கு அனுகூலமான அப்பியாஸங்கள் மிகச் செய்துவருகிறார்கள். ஆதலால் அவர்களுடைய புருவம் உயர்ந்து கண்ணிமை மலர்ந்து குவிந்து திடகாத்ரம் முகத்தில் ததும்பி வழியும்படியாக அவ்வளவு விற்பத்தியாகி யிருக்கிறது. தேஹப்பயிர்ச்சி மட்டுமன்றி கல்விக்கு இன்றியமையா மனப்பயிர்ச்சியும் நன்றாகப் பழகிவருகிறார்கள். இக்காலத்து உயர்தரப் படிப்பெல்லாம் மாணவர்களின் ஸ்வபாஷையான ஹிந்தியில்தானே போதிக்கப்பட்டு வருகிறபடியால், பிள்ளைகள் பாடங்களின் கருத்து மனத்தி லமையப்பெற்று அதிக விவேகம்பெற்று விளங்குகிறார்கள். பொட்டைப்பாடம் போட்டு வாசிக்கும்விஷயத்தின் பொருள் இன்னதென்று கிரஹித்துக்கொள்ள முடியாமல் தடுமாறும் இங்கிலீஷ் பள்ளிக்கூடப் பிள்ளைகளைப்போலின்றி எதையும் மனதில் வாங்கிக் கொண்டு கிரஹிக்கும் சக்தி மிக வாய்ந்தவர்களாயிருக்கிறார்கள். இங்கிலீஷ் பயிர்ச்சியும் அலக்ஷியம் செய்யப்படவில்லை. ரெவரெண்ட் மிஸ்டர் அண்ட்ரூஸ் அவர்கள் பிள்ளைகளோடு பழகிப் பேசிப் பார்த்ததில் அவர்கள் ஆங்கில பாஷையைத் தடையின்றி நன்றாகப் பேசியதிலிருந்து அப்பாஷையில் அவர்கள் இதர காலேஜ் பிள்ளைகளைப்போலவே வேண்டிய அபிவிர்த்தி பெற்றுள்ளார்களென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடியதாக விருந்தது.

''சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்''—

என்ற ஔவையார் வாக்குப்படி, கைப்பழக்கமிருந்தால்தான் 'சித்திரம்' எழுதல் முதலான கைத்தொழில் வேலைகள் நன்றாகப் படியும் சித்திரம் என்பதில் கையெழுத்து முதல் கொல்லு, தச்சுவேலை முதலாக சித்திரமெழு

*By the Rev. C. F. Andrews of Delhi.

டம்' என்பது சுத்திபெற்ருல் அது "உன்னிஷ்டம்" என்று கடவுளது திருவருளைப்பற்றி நிற்கும். "Thy Will be done" உன்னிஷ்டமே யென்னிஷ்டம் என்று யார் கடவுளை வழிபடுகிருர்களோ அவர்களுக்குக் குறைவொன்றுமில்லை. "சித்தன் போக்கு சிவன் போக்கு" என்ற வசனத்தின் அர்த்தமும் அதுவேயாகும். ஆகையால் ஆத்மஞானத்துக்கு அனுகுணமாயிருக்கும் வித்தையே கற்கத்தக்க வித்தையாகும். அந்த வித்தையைக் கற்பதும் "கசடு அற"—மன அழுக்கு நீங்கும்படி கற்கவேண்டும். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்று ஔவையார் சொன்னதை யுன்னி "கற்கக் கசடற" என்னும் திருவள்ளுவர் வசனத்தை நோக்கில் "சித்தவிருத்திநிரோதம்" என்கிற மனப்பழக்கத்தால் காமக் குரோத லோபமோகமத மாச்சரியமாகிற சித்தவிருத்திகளாம். "கசடு"—அழுக்காறு, அற்றுப்போம்படி வித்யாப்பியாசம் செய்க. வித்யாப்பியாசம் செய்து மனப்பழக்கத்தால் அகத்தூய்மை பெற்றபின் (அப்பியாஸ யோகத்தால் பெறற்கரிதான அகத்தூய்மை பெற்றபின்), அதாவது, அஹத்தூய்மைக்கு இன்றியமையாதன எவையோ அவையெல்லாம் கற்கத்தக்கனவாகக் கற்றபின், "நிற்க அதற்குத்தக" அஹத்தூய்மையால் சித்தித்த அருட்பேறு மாருதபடி அஹம்புறமென்கிற வேற்றுமையின்றி உள்ளத்திலுணர்ந்ததுபோல் கள்ளமின்றி நடத்தையிலும் அப்படியே ஒழுகப்பழகுக. இதுதான் கல்வியின் பயன். இதைத்தான் முற்காலத்தில் **வேதாப்பியாஸம்** என்று சொன்னுர்கள். அறிவு தெளியச்செய்யும் அப்பியாஸம் எதுவோ அதுவே **வேதாப்பியாஸம்**. இந்தப் பூர்வீக லக்ஷியத்தை மனத்தில் வைத்து குருகுல வித்யாலயத்தில் மாணவர்களுக்குக் கல்வி போதித்துவருவது மிகவும் சிலாக்கியமாயிருக்கிறதென்று மிஸ்டர் ஆண்ட்ரூ எழுதியிருக்கிருர்.

இன்னெரு விசேஷமென்னவென்ருல், ஸ்வபாஷையில் வித்யா போதம் செய்து வருவதுடன் ஆங்கிலேய பாஷைப்பயிர்ச்சி குன்ருது அதையும் போதித்து, வேத லக்ஷியங்களும் வேத ஸம்பிரதாயங்களாகிய ஸ்மிருதி ஞானமும் சித்திக்க ஸம்ஸ்கிருதத்தை நன்ருகப் போதித்து வருகிருர்கள். வெறும் பாஷா ஞானம்மட்டும் போதாதென்று ஸ்வரம், அர்த்தம், லக்ஷியம் எல்லாம் விளங்க ஸம்ஸ்கிருதத்தைப் பூர்வம் குரு ஸந்நிதானத்தில் சிஷ்யர்கள் கற்று வந்ததுபோல் இக்காலத்தில் குரு குல வித்தியாலயத்தில் போதனை செய்து வருகிருர்கள். இதற்கு படிக்கும் வகுப்பில் பிள்ளைகள் அதிகமாயிருந்தால் குரு சிஷ்யபாவம் நன்ருக ஏற்படாதென்று ஒரு வகுப்புக்குப் பதினறு பிள்ளைகளுக்கு மேல் அதிகப்படாதபடி சிறு வகுப்புகளாகப் பிரித்து வித்தியாபேதம் செய்து வருகிருர்கள்.

குருகுல வித்யாலயத்தில் படிக்கும் அத்தனை பிள்ளைகளும் பிரமசரிய விருதத்தை யனுஷ்டித்து வரப் பழக்கப்படுகிருர்கள். இது எல்லாவற்றிலும் மேலான குணம் தருவதாயிருக்கிறது. ஏனெனில் பிரமசரியமின்றி வித்தை பயிலுவது வீணுமென்பது நிச்சயம். இப்படியாக ஹ்ரிஷீகேச ஸ்தலமாகிய ஹரித்துவாரத்தில் குருகுல மஹா வித்யாலயமென்கிற ஸர்வகலாசாலை யேற்பட்டு நடைபெற்றுவருகிறது. இதைப் பார்த்தவர்களெல்லாம் மெச்சி யெழுதியிருக்கிருர்கள்.

——:(*):——

## *'Sangitha Ratnavali'-A Review.
### "சங்கீத ரத்னுவளி"-விமர்சனம்.

"த்யாநா நந்தமயம் தேவம் நிர்மல ஸ்படி கா கிருதிம்
ஆதாரம் ஸர்வவித்யானம் ஹயக்ரீவ முபாஸ்மஹே."

"அநாஹதஸ்யசப்தஸ்ய:தஸ்யசப்தஸ்யயோர்த்வநி:
த்வநோந்தர்கதம்ஜ்யோதி: ஜ்யோதிரந்தர்கதம்மந.
யந்மநஸ்சிருஷ்டிஸ்திதிவ்யஸநகர்மகிருத்:
தந்மநோவிலயம்யாதிதத்விஷ்ணோபரமம்பதம்."

திருச்சிற்றம்பலம்.

அநாஹதமாகிய ஹிருதய கமலத்திற்குள்ளே சுரோத்ரேந்திரியத்திற்குப் புலப்படாததான அதி சூக்ஷ்ம சப்த மொன்றிருக்கிறது. அந்த சூக்ஷ்ம சப்தத்திற்குள்ளே அதன் வேபனமாத்ரமான (vibrations) த்வனி யொன்றிருக்கிறது. அந்தத்வனிக்குள்ளே ஜ்யோதி யொன்றிருக்கிறது. அந்த ஜ்யோதிக்குள்ளே (சுத்த) மநஸிருக்கிறது. அந்த (சுத்த) மநஸானது சங்கல்ப மாத்திரத்தாலே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கிருத்தியங்கள் மூன்றையும் செய்து வருகிறது. முத்தொழிலுக்கும் காரணமாயிருக்கப்பட்ட அந்த (சுத்த) மநஸ் எதில் லயப்படுகிறதோ (லயத்தை யடைகிறதோ) அதுவே விஷ்ணு. அதுவே மேலான பரமபதம். இது சுருதி வாக்கியம்.

இப்படிப்பட்ட புருஷோத்தமனுகிய மஹா விஷ்ணுவின் மூர்த்தங்களில் ஒன்று ஹயக்ரீவம். அப்படி யென்றால் குதிரை முகத்தை யுடையவர் என்று அருத்தம். விஷ்ணுவானவர் யாக புருஷனும் யாக ரக்ஷகருமாயுளார். ரிஷிகள் யாகம் செய்கையில் யாகசாலையின் முன் அசுரர்கள் வராதபடி வில்லேந்திக்காவல் காத்துவந்த விஷ்ணுவானவர் நீளாதேவியின் மஹிமையால் நின்றபடி வில்லில் தலைசாய்த்துத் தூங்கிவிட்டார். அவரை யெழுப்பத் தேவர்கள் ரிஷிகள் முதலானவர் செய்த பிரயத்தனங்கள் பலிக்காமற்போக, அவர்கள் கரையானையடுத்து விஷ்ணுவையெழுப்பினுல் அதற்கு அவிர்ப்பாகத்தில் ஒரு பங்கு கொடுப்பதாகச் சொல்லித் தூண்டினார்கள். கரையானும் அதற்குடன் பட்டு, அற்ப ஜந்துவானுலும், அந்த மஹா பெரிய முயற்சியில் முன்னிட்டு நின்று தேவர்களுக்கு உதவி செய்வதாக முன் வந்தது. உடனே நாணேற்றப் பட்டிருந்த அந்த வில்லின் கயிற்றில் கரையான்கள் புத்துக்கட்டிக் கொண்டு உள்ளிருந்து அக்கயிற்றைத் தின்னத் தொடங்கின. அக்கயிறு கரையான்களால் தின்னப் படவும் வில்லின் நாணறுபட்டு, அதன் விசையால் வளைக்கப் பட்டிருந்த வில்லின் கொம்பு நிமிர விஷ்ணுவின் தலை தரிக்கப்பெற்று எட்டாத்திக்கில் போய் விழுந்தது. அற்பர்கள் சகவாஸம் ஆபத்துக்கிடமாம் என்பது தேவர்கள் ரிஷிகள் விஷயத்திலும் வீண்போக வில்லை. பிள்ளை வரத்துக்குப்போய் புருஷனைப் பறிகொடுத்தவள் கதியாக மனங்கலங்கி நின்றார்கள். பிறகு எல்லாரும் சேர்ந்து அசுவனி தேவர்களை வேண்டி இதற்கு ஒரு பரிகாரம் செய்ய வேண்டுமென்று மன்றாடி நிற்க, வைத்யத்தில் நிபுணர்களான அசுவனி தேவர்கள் (அஹம் புற மிரண்டும் பொருந்தப் பார்க்கும் பார்வை யுள்ளவர்களாதலால்) அஹமுகத்தால் நடந்தவற்றின் காரணத்தை க்ரஹித்துணர்ந்து பஹிர்முகத்தில் அதை நிறைவேற்றிவைக்க ஒரு உபாயம் தேடினார்கள். விஷ்ணு நித்ராதேவி ஸமேதராயிருக்கையில் தலை தரிக்கப்பட்டதனுல், அத்தலையையே கொணர்ந்து ஒட்ட வைப்பதினுல் தேவர்கள் ரிஷிகளின் காரியம் நிறைவேறுது. அவர் மறுபடியும் யோகநித்ரையிலமர்ந்து விடுவார்; ஆதலால் இந்திரியங்களிற் சிறந்த பிராணியாம் குதிரையின் தலையைக் கொணர்ந்து அதை விஷ்ணுவின் கழுத்தில் ஒட்ட வைத்தால், குதிரைத் தலையின் வாசனு விசேஷத்தால், விஷ்ணு பஹிர்முகப்பட்டு இந்திரியங்களில் வியாபித்து நிற்பர். அப்பொழுது

தேவர்கள் ரிஷிகளின் காரியமும் நிறைவேறும். ஏனெனில், விஷ்ணுவில் லயித்த மநஸ் மறுபடியும் உற்பத்தியாகி இந்திரியங்களில் வியாபித்து நிற்குமாகில் அப்பொழுது இந்திரிய வியாபாரங்கள் குறைவற நடக்கும். தேவரிஷிகளின் கர்மங்கள் நிறைவேறும். "ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்" என்றிருப்பதால் விஷ்ணுவானவர் இந்திரிய வியாபாரத்திலிறங்கினுல், ஜகமெல்லாம் இந்திரிய வியாபாரம் குறைவற நடக்கும். இந்த உபாயம் பலிக்கவே, விஷ்ணுவானவர் குதிரை முகத்துடனே ஹயக்ரீவ மூர்த்தியானர். இந்த மூர்த்தத்தில் தான் அவர் மந்திர தந்திர சாஸ்திரங்களை யெல்லாம் அகஸ்தியர் முதலான மஹரிஷிகளுக்கும் மற்ற தேவர்களுக்கும் கருணையுடன் உபதேசித் தருளினர். மந்திரங்களுக் கெல்லாம் ஆதிமூலமாயுள்ளது **மஹாமந்திரம்.** இந்த மஹா மந்திரத்தின் ரூபம் நாதவடிவம். இந்த நாதம் லயக்கிரமத்தில் நாதாந்தத்திலும், விருத்திக் கிரமத்தில் பிந்துவிலும் (ஜோதி வடிவிலும்) ஒடுங்கும். முன்னது காரணம்: பின்னது காரியம். தத்துவம் காரணத்தி லொடுங்கில் அது (Involution) **லயக்கிரமம்** என்றும், காரியத்தில் ஒடுங்கில் அது (Evolution) **விருத்திக்கிரமம்** என்றும் சொல்லப்படும். விருத்திக்கிரமம் என்பதை ப்ரவிருத்தி யென்றும் லயக்கிரமம் என்பதை நிர்விருத்தி அல்லது நிவிருத்தி யென்றும் சொல்லுவர் மேலோர்.

ஜகத் ரூபமான எல்லாம் நிவிருத்தியில் நாத ப்ரும்மத்தில் ஒடுங்கி, அந்த நாத ப்ரும்மத்திலிருந்தே ப்ரவிருத்தியை அடையும். இதைத் தான் ஸெண்ட்ஜான் என்பவர் "In the beginning was the Word; the Word was with God; the Word was God" என்று கூறியுள்ளார்.

அதையே **ஆத்மவித்யாமஞ்சரியில்** பின்வருமாறு மொழிபெயர்த் திருக்கக் காணலாம்:

ஆதி:

"ஆதியிலுள்ளானாதியொன்றே
ஆதியனாதியுமவனேயாவன்
அனாதியாமவன்ஆதியதாக
ஆதியிற்பிறந்தது நாதந்தானே."

நாதம்:

"நாதமுநாதாந்தமுமொன்றே;
ஆதியில்நாதம்அனாதியிலொடுக்கம்;
ஆதியனாதிபோல்நாதமனாதி;
ஆதியுநாதமுமனாதிதானே."

சிருஷ்டி காலத்தில் அத்வைத வஸ்துவானவொன்றே ஆதியதாக, அந்த ஆதியிலிருந்து **நாதம்** உண்டாக, ஆதியும் நாதமும் மாயையிற் பிரவேசிக்கலாயிற்று. இதையே ஸெண்ட் ஜான் "The Same was in the beginning with God" என்று சொல்கிறார். அதையே ஆத்ம வித்யா மஞ்சரியில் பின் வருமாறு தெளியக் கூறியிருக்கிறது:—

மாயை

ஆனாதியானதுமாயையுங்காணீர்
ஆதியுநாதமும்மாயையிற்கூடிட
ஆனதனைத்தும்ஆபதுஅவனல்;
ஆயதனைத்துமாக்கியஅவனும்மாயவனாகமாறி
[நின்றானே.

நீளாதேவி யென்று சொன்னது இந்த மாயையையே. "மாறிநின்ற மாயவன் தானே, காரண காரிய உபாதன மானான்." இப்படியாகச் சிஷ்டி முறை கூறியுள்ளார். இது எல்லாவற்றிற்கும் பொது. இதை கானவித்தைக்குச் சிறப்பாக வெடுத்துக்கொண்டு கானவித்தையின் உற்பத்தியையும், கானத்திலிருந்து பிறந்த தான ஸங்கீத வித்தையையும் தெளியத் தெரிவிப்பது **"ஸங்கீத ரத்னாவளி."** இதை ஆக்கிய கிரந்த கர்த்தாக்கள் இப்புஸ்தகத்தை நமது பார்வைக்கனுப்பி இரண்டு மூன்று மாதங்களாகியும், நமது ஆபீஸ் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் "சிந்தாமணிக்ரஹம்" புதுப்பிக்கப்பட வேண்டிய காரணத்தால் நேர்ந்த பல ஜோலிகள் நிமி

த்தம் அதைப்பார்க்க ஒழியாமலே போய் விட்டது. லலிதாலயத்துக் குள்ளே பிரணவாலய மும், பிரணவாலயத்துக் குள்ளே சிந்தாமணி க்ரஹமும் கட்டி முடிந்து அனுப்பாற வுட்கார்ந்து வேலை பார்க்கக்கூடிய முதல் தினமான இன்றைக்கே (Whitmonday) அதைப் பார்வையிட்டு விமர்ச மெழுதும்படி நேரிட்டது. ஆதலால் இதுகாறும் தாமதித்ததற்காக கிரந்த கர்த்தாக்கள் க்ஷமை பாராட்டக்கோறி இவ்வரிய புத்தகத்தை வாசித்ததனால் தோன்றிய சில எண்ணங்களைக் கீழே குறிப்பிட்டு வைக்கிறோம்.

ஆதியிற்பிறந்தது நாதமென்று சொன்னோம். ஆதியும் நாதமும் மாயையிற்கூடிட சங்கல்ப மூலமாகிய பரைவாக்கும், அதிலிருந்து பச்யந்தியும், பச்யந்தியிலிருந்து மத்யமையும், மத்யமையிலிருந்து வைகரியும் பிறக்கலாயின. வாக்குக்குத் தோஷம் வருமுன் நாலு வாக்கும் ஒத்து நாதத்திலொடுங்கிக் கிளம்புவதாயிருந்தது. அதற்கு நாத-கீதம் என்று பேர்.

இந்த "நாதகீதமே" ஸங்கீதத்துக்கு மூலமாயிருந்தது.

"கீதம், வாத்யம், ந்ருத்யம்—இம்மூன்றின் சேர்க்கை ஸங்கீதமெனப்படும்" என்கிறார் நமது கிரந்தகர்த்தா.

நாதத்திற்கும் கீதத்திற்கும் நாட்டியத்திற்குமுள்ள த்ரிபுடி லக்ஷணம் சேரப்பொருந்தியதே ஸங்கீதம்.

"நாதத்திலாடி நாற்பதத்தேயாடி
வேதத்திலாடித் தழலந்தமீதாடிப்
போதத்திலாடிப் புவனமுழுதாடுந்
தீதற்றதேவாதிதேவர்பிரானே"

என்பது திருமந்திரோபதேசம். எம்பெருமான் திருமூலதேவர். இத்திருமந்திரத்தினால் திருக்கூத்து தரிசன முணரத்தியுளார்.

நாதத்திலாடிய கூத்துப்பிரளய காலக்கூத்து; நாற்பதத்தேயாடிய கூத்து பிரளயாந்தக்கூத்து. வேதத்திலாடியகூத்து பிரணவநாதத்திற் புகுந்து ஆடிய சிருஷ்டிக்கூத்து. தழலந்தமீதாடியகூத்து தியாகராஜர் திருக்கூத்து. போதத்திலாடியகூத்து ஜீவேசுவர ஐக்கியத்தை யுணர்த்தும் யோகக்கூத்து; புவனமுழுதாடுங் கூத்து போகக்கூத்தும் இத்தனை கூத்துமவர் ஆடினாலும் விஷயப்பற்றுதலின்றி சாக்ஷிமாத்ரமாய் நிற்றலால் "தீதற்ற" வராயிருக்கிறார் "தேவாதி தேவர் பிரானும்" எம்பெருமான். இப்படிப்பட்டவரான ஹயக்ரீவமூர்த்தியை "உபாஸ்மஹே"- மிக வணக்கத்தோடு உபாஸிப்போமாக.

இதுதான் ஸங்கிதரத்னவளிக்கு மங்கள ச்லோகம். இதனுண்மையை யுள்ளுணர்ந்து உபாஸனைமுற்ற உபாஸியமானவர்க்கு நாதானுசந்தான விசேஷத்தால் ஸங்கீதவித்தை தானே வரும். இதனால் ஸங்கீதவித்தை ஆத்மவித்தையேயன்றி அநாத்மவித்தையல்ல என்பதை இக்காலத்தவர் உணரல் வேண்டும். ஆத்மவித்தையை எவனொருவன் அநாத்ம வித்தையாக உபயோகிக்கிறானோ அவன் அவ்வித்தையின் மஹத்துவத்தைக்கெடுக்கின்ற சண்டாளனாகின்றமையால் வித்யேசுவரியின் சாபத்துக்காளாகிறான். இது சத்தியம். ஆகையால் ஸங்கீத வித்தையை ஆத்மார்த்தமாக வுணர்ந்து ஆத்ம வித்தையாகக் கசடறக்கற்று, கற்றபடி நிற்கும் வித்யார்த்தியே ஸங்கீதவித்துவானாய் ஹயக்ரீவ மூர்த்தியின் அருளுக்கும் அனுக்கிரகத்துக்கும் பாத்திரனாகிறான். மற்றவர்களெல்லாம் அபாத்திரர்களென்று நாமிங்கு சொல்லத்தேவையில்லை.

ஆகையால் பக்தி சிரத்தையும் தேவதா விசுவாஸமு மில்லாதவர்களுக்கு ஸங்கீதவித்தை ஸத்பலனைக் கொடுக்காது. சூந்நியவித்தையாக மாறி அறிவைப்பாழ்படுத்தும் கருவியுமாகும். தியாகராஜர், சுப்ரமணிய ஐயர், மஹாவைத்திய

நார்தய்யர் போன்றவர் ஸங்கித வித்தையை ஆத்ம வித்தையாகக் கற்றுக் கிருபாகடாக்ஷம் பெற்று மஹான்களானவர்களுக்குதாரணமாம். மற்றப்படி பாடத் தெரிந்ததென்று பாடிப்பாடிப் படுகுழியில் விழுந்து கெட்டவர்கள் சங்கைக் களவில்லை; ஆதலால் அதற்கு உதாரணம் சொல்லத் தேவையில்லை.

ஸங்கீத வித்தையைக் கசடறக் கற்றுத் தேர்ந்த மஹான் குருகடாக்ஷம் பெற்றவனுகி வித்யா சம்பந்நனுய் வந்தனம் செய்யும் சுலோகத்தை இங்கு எடுத்துரைப்பதொன்றே நாம் மேலே வற்புறுத்திக் கூறினதற்கெல்லாம் அத்தாக்ஷியாய் நிற்கும். அது இது:—

"சைதன்யம்ஸர்வபூதானும்நிர்விருதிர்ஜகதாத்மனும்
நாதப்ரும்மததா நந்த மத்விதீயமுபாஸ்மஹே"

இப்படியாக சங்கீத வித்தையில் தேர்ந்தவன் ஸர்வ பூதங்களிலும் சைதன்ய மிருந்து பிரகாசிப்பதை யுணர்ந்து "அயமாத்மா ப்ரஹம" என்று இந்த ஜகத்துக்கெல்லாம் ஆத்மனு யிருக்கின்ற நாத ப்ரஹ்மத்தை தரிசித்து அத்விதிய ஆநந்தமுற்று "ஏகமேவாத்விதீயம்" என்று சுருதிகூறிய உண்மைப் பொருளையே உபாஸிக்கிறவனுகிறுன்.

ஸங்கீதத்தின் முக்யாம்சம் **ஸ்வரம்**. ஸ்வபாவமாகவே ரம்யத்தையுடையது **ஸ்வரம்**. வாக்குத்தோஷம் நேரிடுமுன் தேஜோமனவிலிருந்து சங்கல்ப மூலமாகப்பிறக்கும் த்வனிக்கு **ஸ்வரம்** என்றுபேர். "அகாராணும் அக்ஷரோஸ்மி" என்ற பிரகாரம் இந்த நாதக்கூத்துத் தானே ஸ்வரம். இது அகாரத்தை அடையாளமாக (குறியாக) உடையது.

மனவில் அழுக்கேறினுல்தான் ஸ்வரம் கெட்டு அபஸ்வரம் ஜநிக்கிறது.

இப்படி இயல்பாயுள்ள ஸ்வரத்தை "நாதக் கூத்து தரிசனங்கண்டு" த்ரிபுடி கடந்து "திருஷ்ட தரிசன தரிசியாமி த்யக்தவாவா ஸநயாஸஹா" என்ற சுருதி வசனப்படி காண்பான் காட்சி காண்பொருள் என்கிற த்ரிபுடி மூன்றையும் வாசனையோடு தள்ளி அத்விதீய அநுபவம் சித்திக்கப்பெற்றவர் நாதப்ரஹ்மம் தானேயாகி,—

"அகாரமுதலவெழுத்தெல்லாம்
ஆதிபகவன்முதற்றேயுலகு"

என்னுந் திருவாக்கின் உண்மையை உணர்ந்துய்ந்தவராகிறுர். இது ஸங்கித வித்தையின் உட்பொருள். இனி இம்மஹா வித்தையின் அப்யாஸம் சித்திக்கும் பொருட்டு, "இலக்ஷியம் கண்டதற்கு இலக்ஷணங் கூறும்" நூலாகிய ஸங்கித ரத்னுவளியின் உள்ளடக்கத்தைப்பற்றி மற்றெருருமுறை சுருக்கி யெழுதுவோம்.

இந்த ஸங்கித வித்தையை முறைப்படி கற்க விரும்பும் ஒவ்வொருவரும் இப்புஸ்தகத்தை வாங்கிப்படிக்க வேண்டுமென்று மட்டும் இங்கே வற்புறுத்தி கூறுவோம்.

———:(✱):———

## The Worship of the Mother.

*Motto:*—"Napoleon once said that what a Nation needed most to make it great was "good mothers."

ஸ்ரீமாத்ரே நமஃ

———

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"
அப்படி யென்றுல் என்ன?

தாயும் தகப்பனும் சாக்ஷாத்காரமாக அறியத்தக்க முதல் தெய்வம் ஆகிறுர்கள். எந்தக் குழந்தை தாயன்பை யறியாதோ அதன் ஜன்மம் பாழ்தான். ஏனெனில் மழைமுகமறியாப் பயிர்போல் தாய்முகமறியாக்குழந்தை வாடி வதங்கிக் கருகிப்போம். இது தேஹத்துக்கு மட்டும் சொன்னதன்று. மனதுக்கும் புத்திக்கும், அறிவுக்கும் ஒக்கும். ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள் "தாயாயிருந்து முலையைத் தந்

தாய் போற்றி!" யென்று கடவுளை வாழ்த்தி யிருக்கிறார். "குழந்தையின் தேஹ க்ஷேமத்துக்கு முலைப்பால் எப்படி அவசியமோ, அப்படிப் போல ஜீவர்களின் ஆத்ம க்ஷேமத்துக்கு அன்பு அவசியம்,

"அன்பும் சிவமு மிரண்டென்பர் அறிவிலார்;
அன்பே சிவமாவதாரும் அறிகிலார்;
அன்பே சிவமாவதாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந்தாரே."

தாய்க்குப் பால் சுரப்பதுபோல் கடவுளுக்கு அன்பு சுரக்கும். தாயன்பு பாலாயொழுகுவதுபோல் அன்பு சுரந்து அருளா யொளிரும். இந்த அருளொளியிற் பிறந்தவர் அருட்குழவி யாவார்.

ஜகந்மாதாவைக் காணவேண்டுமானல் தாய் மூலமாகத்தான் காணலாம்.

"தசமியிலே ஸாகாரத்துக் கப்பாலேறிச்
சிலம்பொலியு முனதுடைய இருக்கால் கண்டு
நிஜமாக ஸ்தூல சூக்ஷ்மத்தில் கூடி
நிஷ்களத்தில் நீயும்நானு மொன்றேயாகி
அறிவில்லா ஆனந்த மயமே யாகி
அருள் வெளியாய் வரமருள்வாய் அகண்டரூபி"

என்றார் தாயைக் கண்ட தன்னியர்கள்.

"ஒன்றிலே பிறந்து
இரண்டிலே மறந்து
மூன்றிலே திரிந்து
நான்கிலே விரிந்து
ஐந்திலே வளர்ந்து
ஆறிலே முதிர்ந்து
ஏழிலே யுணர்ந்து
எட்டிலே யுருவாகி
ஒன்பதில் ஒன்றாகிப்
பத்திலே பதியடைந்த
பாக்கியத்தை யென்ன சொல்வேன்!

"ஏ கைவசக்தி யென்று" ஒன்றுக்கு இலக்காகிய சக்தியில் பிறந்து அந்த ஏகிபாவத்தை விட்டு நான், நீ யென்கிற பேதபாவம் தோன்றவும் அந்தசக்தியை மறந்து, முக்குணங்களின் மாறுபாட்டால் தனது ஆத்மசக்தியை மறந்த அறிவு திரிந்து, நாலு கரணங்களினாலே† ப்ரவிருத்தி மார்க்கத்தில் அறிவு விசாலப்பட்டு, ஐந்தாகிய இந்திரியஞானத்தில் வளர்ந்து, செய்தல், செய்வித்தல், உடன்படல், விடுதல், விடுவிடுவித்தல், வீடுபெறல் ஆகிய பற்றுதல் விடுதல் அம்சங்கள் ஆறிலும் முதிர்ந்து ஸப்தமாத்ரா ரூபப் பிரணவ சப்தத்தில் பழுத்து ஸப்த தாதுக்களும் அவ்வவற்றின் தொழிலில் நின்று பூரணமாக, அஷ்டமூர்த்தங்களும் தானே யாகி

"இவை யெல்லாங்கூடி யுடம்பாய வொன்றி
னவை யெல்லாமானது விந்து"

என்றபடி, நவ சக்திகளுங்கூடிய விந்து தத்துவத்தில் மறுபடி சக்திமயமான ஒன்றேயாகி அந்த சக்தியும் சிவமன்றி வேறில்லை யென்கிற அபேத ஞானமாம் தசம ஸ்தானத்தில் பசுபாசமிரண்டும் நீங்க "பதியடைந்த பாக்கியத்தை" யென்னமாய்ச் சொல்வேன்! மனோ வாக்குக் கெட்டாத ஓர் அனுபவத்தைச் சொல்வது சாத்தியமில்லை யாதலால் ஸ்வானுபவத்தில் தானே யாவரும் அறிந்துகொள்க!—என்றபடி தாயன்பு எப்படி யிருக்குமென்றால் அப்படி யிருக்குமென்று தான் சொல்லலாம்: அதாவது ஸ்வானுபவப்படி யிருக்கும் என்றவாறு.

துருவனுக்குத் தாயன்பு எப்படி யிருந்தது? ப்ரஹ்லாதனுக்குத் தாயன்பு எப்படி யிருந்தது? தாயன்பு தனயனை ஆளாக்கி விடும். இப்படிப் பட்ட தாய்மாரே "நல்லதாய்" என்னும் சொல்லுக் கிலக்ஷியமாவர். "புடவை கட்டினவ ளெல்லாம் பெண்பெண்டாட்டியாக மாட்டாள்" என்பதுபோல பிள்ளை பெற்றவளெல்லாம் தாயாகமாட்டாள். பின்னை? தயவினாலே பிள்ளையை இரக்ஷிக்கும் சக்தி வாய்ந்தவள்தான் தாயாவள். அப்படிப்பட்ட தாய்மார்கள்

†மனஸ், புத்தி, சித்தம், அகங்காரம்.

தான் "நல்லதாய்" ஆவர். அவர்களே ஸத் புத்திரனைப் பெற்று, பெற்ற பிள்ளையை ஆளாக்கி விடுவர். அப்படிப்பட்ட தாய்மார்களையுடைய தேசமே முன்னுக்குவரும். எல்லாச் செல்வத்திலும் நல்ல தாய் வயிற்றிற் பிறப்பது பெறற்கரும் பெருஞ் செல்வமாம். இது பூர்வ ஜன்ம புண்ய வாசனையினாலேயே சித்திக்க வேண்டும். பால்ய விவாகமும் சிசு விவாகமும் நடக்கும் இக்காலத்தில் பிஞ்சில் பழுத்த தாய் வயிற்றில் உத்தமமான ஸத் புத்திரர்கள் எப்படி ஜனிப்பார்கள்! மூடமான தாய் விவேகமான புத்ரனைப் பெறுவதெப்படி?

ஆகையால் இந்தியா முன்னுக்குவர வேண்டுமானால் நல்லதாய்களின் புண்யத்தால் ஸத்புத்திரர்கள் உதித்து அவர்களே இந்தியாவை முன்னுக்குக் கொண்டு வரவேண்டும். அதற்கு இப்பரத கண்டத்தில் வித்யாலக்ஷணங்களமைந்த பெண்மணிகள் அதிகரிக்க வேண்டும். அவித்யாம்சமான பெண்கள் தொகை குறையவேண்டும். பெண்கள், வித்யேசுவரியைத் தியானித்து வித்யா ஸம்பந்நர்களாயிருக்க வேண்டும். மூடமதிகளால் உண்டாகும் பிரஜாவிருத்தி பூமிக்குப் பாரமேயன்றி வேறு பிரயோசனமில்லை. விவேக ஸம்பந்நர்களான பெண்மணிகள் வித்வத் லக்ஷிய லக்ஷணம் பொருந்திய குழந்தைகளைப் பெற்று தேசத்தை முன்னுக்குக் கொண்டு வருவார்கள். இதை நாம் நமது சுருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணாதிகளில் எங்கும் பரக்கக் காணலாம். இராமாயணத்திலும் மஹா பாரதத்திலும் மாதர்களின் குண மணத்தாலுண்டாகும் நன்மைகளைப் பரக்கக் காணலாம். அப்படியிருக்க நமக்கு அந்நியர்களான மாதர்கள் நமது மேலான லக்ஷியங்களை யுணர்ந்து அவைகளையே நமக்குப் போதிக்கும்படியான கதியடைந்திருப்பது இந்தியா செய்த பாபமே. இந்தப் பாபத்துக்கு விமோசனம் நாமே தேடல் வேண்டும். இதற்கு "ஸ்ரீமாத்ரே!" என்னும் இரகஸிய நாம உபாஸனையைத் தவிர வேறு வழியில்லை.

---

# Historical Selections.

## The Romance of A Vanquished King.

## சரித்திரவிலாசம்.

—:(*):—

ஜயிக்கப்பட்டு ராஜ்யத்தை விட்டோடின ஒரு மொகலாயராஜன் கதை.

(20-வது வாலியம் 310-வது பக்கத்தொடர்ச்சி.)

நாம் முன்சொன்ன பள்ளர்கள் தம்மிருப்பிடத்தைவிட்டு டில்லிப் பட்டணம் போய்ச் சேர்ந்தார்களென்றும், அங்கே அந்தப் பள்ளன் மகளும் அந்தப்பட்டணத்து மந்திரி குமாரனும் ஒருவர்மேல் ஒருவர் மிக்க ஆசை கொண்டார்களென்றும் நடந்தகதையைச் சொல்லிவிட்டோமல்லவா? அதற்குமேல் கதையைக் கேளுங்கள்.

அவ்விருவருடைய மனநிலையையும் பார்த்து அவர்களுடைய அபிப்பிராயத்தை நன்றுயறிந்து கொண்டு மேர்கனத்தின் தகப்பன் ஒரு நாள் பெண்ணைப்பார்த்து, "குழந்தாய்! உன்னுடைய மனப்போக்கைப் பார்த்து எனக்கு வெகு சந்தோஷமாயிற்று; கடைசியாய் ஒரு சிறந்த புருஷனிடத்தில் ஆசை கொண்டாயே" என்று சொல்ல, அவளும் அதைப் பெருமையாகவே அங்கீகரித்தாள். அந்த மந்திரி குமாரன் அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போவதும் விநோதமாய் அவர்களோடு பேசுவதுமாக விருந்தான். அவர்களோடு பழக்கம் அதிகமாக ஆக அந்தப்பெண்ணிடத்தில் அவனுக்கு ஆசையும் அதிகமாகிக்கொண்டே வந்தது. அந்தப்பெண் தாழ்ந்தஜாதியிற் பிறந்தவளானதுபற்றி பிரசித்தமான பாடசாலையில் போய்ப் படிக்கக்கூடாமலிருந்தாலும், தன் குடியிருப்பு வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலிருந்த ஒரு உபாத்தியாயரிடத்தில் அவருடைய உதவியாலும் தன்னுடைய யுக்தி புத்திகளாலும் சீக்கிரத்திலேயே போதுமான கல்விகற்றாள்.

அவர்களிருவரும் ஒருவர்மேலொருவர் ஆசைகொண்டதுமுதல், அந்த மந்திரிகுமாரனும் மோகனமும் நாள்தோறும் எங்கேயாவது ஓரிடத்தில் ஒன்றாய்க்கூடி வினோதமாய்ப் பேசுவது வழக்கம். அப்படி ஒருநாள் பேசிக்கொண்டிருக்கையில் மந்திரிமகனுக்கும் பள்ளன் மகளுக்கும் அடியில் வருமாறு சம்பாஷணை நடந்தது.

மந்திரி குமாரன்:—உன் தாய் தந்தையர்களை விட்டிருப்பதென்றாலும் உனக்குச் சந்தோஷமல்லவா ?

மோகனம்:—அது எனக்குச் சந்தோஷமுமன்று, அப்படி அவர்களை விட்டிருக்கும்படியான காலமும் வராது; நான் ஏன் அவர்களை விட்டுப்போகவேண்டும் ?

மந்திரி குமாரன்:—உனக்குக் கலியாணமானாலோ ?

மோகனம்:—அப்பொழுது அவர்களும் என்னோடு கூடவே வாழட்டுமே.

மந்திரி குமாரன்:—உன் கணவனுக்கு அவர்களிடத்தில் விருப்பமில்லாமற் போனாலோ ?

மோகனம்:— அப்படிப்பட்டவனுக்கு என்னிடத்திலும் விருப்பமிராததுதான், ஒருவனுக்கு ஒன்றின்மேல் உண்மையாய் ஆசையிருக்குமானால், அதற்காக அதைப்பற்றி எல்லாவற்றின்மேலும் ஆசையுண்டாகாதா ?

மந்திரி குமாரன்:—உன் தாய் தந்தையர்கள் உன்னோடுகூட வந்திருக்கக்கூடாததாய் நீ ஒருவனோடு சம்பந்தப்பட்டிருந்தாலோ?

மோகனம்:—அதென்ன சம்பந்தமோ எனக்குத் தெரியவில்லையே:

மந்திரிகுமாரன்:—ஆசைப்பெருக்கு அதிகரித்துக் கலியாண மில்லாமலே ஒருவரோடு சேர்வதாக வைத்துக்கொள்; அப்போது என்ன செய்வாய்?

மோகனம்:—அப்படிப்பட்ட காரியம் நான் ஒருபோதும் செய்யத் துணிய மாட்டேன்? ஏன் வீணான பேச்சுப் பேசுகிறாய்?

மந்திரிகுமாரன்:—ஆனால் நீ அப்படி ஒருவனையும் நேசிப்பதில்லையோ?

மோகனம்:—உலக நீதிப்படி என்னைத் தொட்டுத் தாலி கட்ட விரும்பாதவனை நான் நேசித்தாலென்ன? நேசியாவிட்டாலென்ன?

மந்திரிகுமாரன்:—உன்னிடத்தில் எனக்கு மனப்பற்று இவ்வளவென்பதைக்கூட நான் உன்னுடன் வாய் விட்டுச் சொல்லவேண்டுமோ!! ஆயினும் ஜாதிக்கட்டுப்பாடுகளுக்கு சற்றே உட்படவேண்டி யிருக்கிறது. எப்படியானாலும் உன்னிடத்தில் எனக்கிருக்கிற ஆசையும் பெருமையும் நான்சாகுமளவும் அழியாது. நமக்குள் மறைவடமேன்? தெளிவாய்ச் சொல்கிறேன் கேள்: நீ சொல்வதெல்லாம் நியாயமே. நீ ஜாதியில் பள்ளச்சி யென்பது ஒன்றுமாத்திரமே நான் உன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளத் தடையா யிருக்கிறதென்பதை நான் உனக்கு எடுத்துக் காட்ட வேண்டுமோ? நான் அப்படிக் கலியாணம் செய்துகொண்டால் இததேசத்தா ரெல்லாரும் என்னைத் தாழ்வாக நினைப்பார்கள். உனக்கும் அவமதிப்பு உண்டாகும். உலகத்தார் ஏற்படுத்திய கலியாண மென்கிற கட்டு ஒன்றுமாத்திர மில்லாமல் நாம் இருவருந்தனியே சேர்ந்திருப்பதற்கோ யாதொரு தடையுமில்லை; அப்படிச் செய்வதானால் நம்முடைய நேசம் முதலியவற்றிற்கு ஏதாவது குறைவு உண்டாகுமென்று நினைக்கிறாயோ? அப்படி ஒருபோதும் இராது—என்றான்.

அதைக் கேட்டு அவள் மிகவும் விசனமடைந்தவளாய், என்னுடன் இத்தனைநாளாய்ப் பழகியும் உனக்குத் தெரிந்தது இதுதானா? ஒருவனுடைய நேசத்திற்காகப் பெண்களின் பெருமை

யை அநியாயமாய் அழிக்க எனக்கு விருப்ப மில்லையென்பது உனக்குத் தெரியாதா? நீ மகா பிரபுவானால் உன்மட்டும். என் சுக வாழ்வுக்கு வேண்டிய பொருள் என் வீட்டிலிருக்கிறது. இதுமுதல் நீ வேறு நான் வேறுதானென்று சொல்லிச் சரேலென்று எழுந்து போய் விட்டாள்.

அந்தப் பெண்ணின் தீர்மானத்தைக்கண்டு தாய் தந்தையர்களும் சந்தோஷித்தார்கள். அன்றுமுதல் அவர்கள் அந்த மந்திரி மகனைத் தங்கள் வீட்டுக்குள் வரவொட்டுகிறதில்லை. மறுபடியும் அங்கே வரவேண்டுமென்று அவன் பலவிதமாய் முயன்றான்; ஒன்றும் நிறைவேறவில்லை. அவர்கள் மறுக்க மறுக்க அவனுக்கு அந்தப் பெண்ணிடத்தில் ஆசை யதிகரிக்கத் தலைப்பட்டது. அதனால் அவன் அவளைக் காண வழி தேடுவதே வேலையாக விருந்தான்.

அந்த மோகன மென்கிற பெண் தோழி யொருத்தியோடு காலை மாலைகளில் அப் பட்டணத்து வெளியில் வினோதமாய் உலாத்துவது வழக்கம். நடுவழியில் அவள் மந்திரிகுமாரனை யெங்கேயாவது கண்டாலும் காணாது போலவே முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விடுவாள். இப்படியிருக்க ஒருநாள் வெளியே போனவள் வழக்கமாய் வருகிற வேளைக்கு வீட்டுக்கு வரவில்லை. அது கண்டு அவளுடைய தாய் தந்தையர்கள் கொஞ்சம் அச்சங்கொண்டார்கள். அப்படியே இரண்டொரு நாளாயிற்று. அவளும் வரவில்லை; அவளோடுகூடப்போன தோழியும் வரவில்லை. அதனால் அவரை யாரோ ஒருவன் இழுத்துக் கொண்டு போய் விட்டானென்று தீர்மானித்தார்கள்.

இனி அவர்கள் தங்கள் பெண்ணைக் கண்டு பிடிக்கிற வழியெப்படி? இப்படி மகளைக்காணாமல் வியசனப்படுகையில் பள்ளன் தன் பெண் சாதியைப் பார்த்து, "நமது குழந்தையைக் கண்டுபிடிக்கத் தக்க உபாயமொன்று என் மனதில் தோன்றுகிறது; இந்த ராஜா மிகவும் நியாயஸ்தரென்று எனக்குக் கேள்வி; நாமும் முன் இவருக்குக் கொஞ்சம் உதவி செய்திருக்கிறோமல்லவா? அதையே சிபாரிசாகக் கொண்டு, மறுதரம் அவர் கொலுமண்டபத்தில் சபை கூடியிருக்கும் போதுபோய், அவர் பாதங்களில் வீழ்ந்து நம் மகளை வரவழைத்துத் தரும்படி வேண்டுகிறேனென்று சொல்லி அந்த நாள் வருமளவும் காத்திருந்தான்.

அப்படியே மறுதரம் ராஜா மகாசபை கூடினபோது அந்தப்பள்ளன் அரசனுடைய கொலு மண்டபத்திற்குச் சென்றான். அம் மண்டபத்தின் அழகைக் கண்டபோது அவனுக்குண்டான திகைப்பை யென்னென்று சொல்லலாம்! அந்தச் சக்கரவர்த்தி வீற்றிருந்த மயிலாசனத்தைப்போல விசித்திரமான பொருள் உலகத்தில் வேறொன்றுமில்லை. அம்மயில் சிறகு விரித்து ஆடுகிற வண்ணமாய் வச்சிரம் வைடூர்யம் முதலிய நவரத்னங்களால் வெகு அற்புதமாய்ச் செய்யப்பட்டிருந்தது. அதை எழு கோடி ரூபாய் விலை மதித்தார்கள். அந்த மண்டப முழுதும் சிறந்த சலவைக்கற்களால்செய்து வெகு நேர்த்தியான சித்திர வேலை அமைக்கப்பெற்றிருந்தது. பல வாறு சொல்லி யென்ன? பூலோக சுவர்க்கம் ஒன்று உண்டென்றால் அது இதுவே யென்னும்படியாயிருந்தது. அந்த மயிலாசனத்துக் கருகே ஒரு பளிங்கினால் விசித்திரமான ஆசனமொன்று ஒரு நாற்காலி யளவு விசாலமாய் அமைக்கப்பட்டிருந்தது. தனியாய் மந்திரிகளோடுமட்டும் கூடுகிற காலங்களில் சக்ரவர்த்தி அதிலே வீற்றிருப்பது வழக்கம். பொன் வேலைப்பாடுகள் செய்த பெரிய கும்மட்டங்களில் அம்மண்டபம் நிரம்ப் விளக்குள் ஏற்றப் பட்டிருந்தன.

இந்தப் பள்ளன் அவ்விடத்திற்குச் சென்ற போது அம்மண்டபத்தில் யாவரும் வந்து நிறைந்திருந்தார்கள். இவன் உள்ளே நுழையப் பார்க்கையில் அங்கிருந்த காவற்காரன் ஒருவன் அவனைப் போகக்கூடாதென்று தடுத்துவிட்டான். தடுத்தும் அவன் கேட்கவில்லை.

(இன்னும் வரும்)

---

## Scientific Notes and Facts.

### "Harnessing Nature"—"வாசி வசம்."

---

மேற்றிசை சாஸ்திர விற்பன்னர்கள் ஆகாசத்தின் சக்தியை (வான்சக்தியைக்) கொண்டு யந்திரங்களை ஓட்ட முடியாதா! என்று யோசித்து வருகிறார்கள். ஏனெனில் இன்னும் சில நூற்றாண்டுகளில் உலகத்திலுள்ள நிலக்கரி யெல்லாம் யந்திரங்களுக்குத் தீ மூட்டுவதில் எரித்தாய்விடுமாம்.

* * *

"The free energy of space"—ஆகாசத்தில் விலையில்லாமற் கிடைக்கக்கூடிய வான்சக்தியை யந்திரங்கள் ஓட்ட உபயோகிக்க முடியாதா? என்று ஒருவர் "ஸயன்டிபிக் அமெரிக்கன்" என்னும் பத்திரிகையில் ஒரு விமர்சம் எழுதி யிருக்கிறார். அதில் அனேக அற்புதமான சாஸ்திர உண்மைகளை வெளியிட்டிருக்கிறார். அவைகளை ஆராய்ந்தெடுத்து இங்கே குறிப்பிடுவோம்.

* * *

இதுவரையில் ப்ராகிருதத்திலுள்ள சக்தியை யந்திர வேலைக்கு உபயோகித்து வந்திருப்பதில் மலையருவிகளின் சக்தி விசேஷமாம். காற்றாடி யந்திரங்களால் காற்றின் சக்தியை உபயோகிப்பது சகஜமாயிருந்தாலும் காற்றைப் பிடித்து கரகத்திலடைக்க முடியவில்லையால், காற்று அடிப்பதை இஷ்டம்போல் செய்ய முடியவில்லை. ஆனால் மலையருவிகளில் தண்ணீர் வீழ்ச்சியுள்ள இடங்களில் தண்ணீரின் சக்தியை உபயோகித்து வருவது அதைவிட மேலாக விருக்கிறது. ஏனெனில் நீரருவிகளில் தண்ணீர் வருஷம் 360 நாளும் விழுந்து கொண்டிருக்கின்றன.

* * *

உள்ளபடி உண்மையாக ஆராய்ந்தால் ப்ராகிருத சக்தியெல்லாம் பிரதமத்தில் சூரியனிடத்திலிருந்துதான் உண்டாகிறது. சூரிய வெப்பமில்லாவிட்டால் காற்றோட்ட மில்லாமல் நின்றுபோம். தண்ணீர் யந்திரங்களிலுபயோகிக்கும் சக்தியும் ஆதியில் சூரியனிடமிருந்தே உண்டாகிறது. எப்படியெனில், சமுத்திரத்திலுள்ள ஜலத்தை நீராவியாக்கி மேகங்களாகச் செய்வது எது? சூரிய வெப்பம்தானே. மேகங்கள் மலைகளின்மேலுள்ள ஏரிகளிலும், மலையுச்சிகளிலும் பனியாகவும், மழையாகவும், ஜலத்தைப் பொழிய, அந்த ஜலம் மறுபடியும் பூமியின் ஆகர்ஷண சக்தியால் (gravitation) மேட்டுப்பாங்கிலிருந்து பள்ளத்தை நோக்கி யோடுகிறது. அப்படியோடுகையில் உயர்ந்த மேட்டுப்பாங்கான இடத்திலிருந்து மலையருவிகள் மிகவும் தாழ்ந்த பள்ளத்தாக்குகளில் விழும்பொழுது, தண்ணீர் வீழ்ச்சியினலுண்டாகும் வேகத்தை தண்ணீர் யந்திரங்களில் பிடித்து அந்த யந்திர சக்தியைப் பல வேலைகளுக்கும் உபயோகித்து வருகிறார்கள். சிவசமுத்ரம் மலையருவியிலிருந்து பிடித்த யந்திரசக்தி மைசூரிலுள்ள சுரங்கங்களிலுள்ள யந்திரங்களை இயக்கி வேலை செய்விக்கிறது. அமெரிக்காவிலுள்ள பேர்போன நயாகரா மலையருவியின் சக்தி வெகு தூரத்திலுள்ள பட்டணங்களுக்கு மின் தந்தி வழியாகக் கொண்டுபோய் உபயோகிக்கப்படுகிறது.

* * *

மேற்றிசையார் இப்படி உபயோகிக்கப் பார்க்கும் ப்ராகிருத சக்தி நாம் "பிராண சக்தி',

யென்று தொழும் சக்தியன்றி வேறு அல்ல. பிராணசக்தியை தூண்டில் போட்டும் வலைபோட்டும் பிடிக்க முடியாது. இந்தப் பிராண சக்தி சிதம்பரத்திலுண்டாகி சிதம்பரத்தில் தானே யொடுங்குகிறது. இந்த பிராண சக்தியின் இயக்கத்தாலேயே இந்த உலக மெல்லாம் இயங்குகிறது. இந்த உண்மையை நமது யோக சாஸ்திரம் நன்றாக விளக்குகிறது.

* * *

யோகத்தில் பிராணாயாமம் என்று சொல்லப் படுவது இந்த பிராண சக்தியை வசப்படுத்தும் மார்க்கத்துக்குச் சொல்கிறதன்றி வேறல்ல. இதைப் பிண்டத்தில் கண்டபின் அண்டத்தில் உபயோகிக்கும் விதம் அதிரகவியமாக ஆவரண தேவதைகளால் காக்கப்பட்டு வருகிறது. மேற்றிசையார் ஜட சக்தியை உபயோகிக்கப் பார்க்கிறார்கள். சித்தின்றி ஜடம் ஆடாது. ஆகையால் சித் சக்தியின் சந்நிதானத்திலன்றி ஜடசக்தி ஆடாது. இந்த சக்தியின் இயக்கத்தைத்தான் "திருக்கூத்து தரிசனம்" என்று சொல்கிறது.

* * *

"திருக்கூத்து தரிசனம்" கண்டவர் எக்கூத்தும் ஆடலாம். யோகசித்திகளெல்லாம் பிராகிருத சக்தியை உபயோகிப்பதால் ஆகும் அதிர்சயங்களன்றி வேறல்ல. அந்த யோகவித்திகளால் உலகரக்ஷணம் ஏன் செய்யக்கூடாதென்று ஒருவர் இன்றைக்குப் பனிரண்டு வருஷங்கள் முன்கேட்ட கேள்விக்கு அவருக்குச் சொன்ன பதிலை ஆத்மவித்யாமஞ்சரியிலிருந்தெடுத்துக் கூறுகிறோம்.

* * *

இந்தப் பாழான வுலகில் பொய்வாழ்வு வாழும் புல்லியர்கூத்துப் பெருங்கூத்தா யிருக்கிறது. ஆனால் அவையெல்லாம் உள்ளாய்ந்து பார்த்தால் ஈசுவரன் திருக்கூத்தின்றி வேறல்ல வென்பது ஸ்பஷ்டமாய் விளங்கும். உலகில் நடக்கும் அக்கிரமங்களைக்கண்டு மனங்கன்னிப் பேசிய ஒருவருக்கு உள்ளுணர்வை அற்பசம்பளத்துக்காகத் தத்தம் செய்துவிடாது காப்பாற்றிவரும் மற்றொரு நண்பர் சொன்னபதில் வியக்கத்தக்கது. ஏனெனில் அது உண்மையே. "பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்" என்று **சிவவாக்கியர்** விளித்துக் கூறிய மாந்தர்கள் எக்காலத்திலும் ஏராளமாயுளர். அவர்கள் கர்மம் அவர்களைத் தொடர்வதன்றி அவரைச் சேர்ந்தவர்களையும்பற்றியிருக்கிறது. ஒரு தேசத்தின் பாபபுண்யம் அத்தேசத்தவரைவிட்டுப் போகாது. உலகில் அக்கிரமங்கள் நடக்காவிட்டால் ஈசுவர நியமம் தவறிப்போம். உலகப் பிரவிருத்தி நின்றுபோம்" என்றார் நாம் முன்சொன்ன ஆத்மநேசர்.

"பெற்றதாய்" என்றது "ஏக்கைவசக்தி" யென்று கூறிய சித் சக்தியேயாம். இவள் பிரயோசனார்த்தம், நாலுவிதமாகப் பரிணமித்து இவ்வுலகத்தை நடத்துகிறாள். பவானியாக விருந்து சிவபோகமளிக்கிறாள். "ஆபோவா இதம் ஸர்வம்" என்ற மந்திரப்படி இந்த நாமரூபப் பிரபஞ்சமெல்லாம் அவள் திருமேனியேயாம். விஷ்ணுவாக விருந்து (இதைத்தான் 'வான்சக்தி' யென்று சொல்கிறது; இதன் ஒரு அம்சத்தையே மேற்றிசையார் கிரஹிக்கப் பார்க்கிறார்கள்), உத்யோகார்கமாய் எல்லா வேலையையும் செய்யுமாற்றலளிக்கிறாள். சூரியன் இந்த விஷ்ணு சக்தியின் ஒரு அம்சமாதலால் அதற்கு சூரியநாராயணன் என்றுபேர். இருட்டுருவாயிருந்து தாமஸப் பிரதானமாய் அறிவற்ற எல்லாரையும் **தன்** கோபத்துக்காளாகச் செய்கிறாள். அதர்மம் வலுத்தபோது துர்க்கையாக அவதரித்து பிரபஞ்சப் போர்புரிந்து தர்மத்தை நிலை நாட்டுகிறாள்.

இப்படி நாலாவிதமாக அவதரித்துப் பிரயோசனார்த்தம் உலகை நடத்தி வருகிற சக்தியை கூடு வைத்து எலி பிடிப்பதுபோல் பிடிக்க

ம்பார்த்தால் முடியுமா? அறிவாலறிந்து அறிந்த அறிவும் கடந்து அறிவானந்தமாய் அவ்வோடு ஐக்கியமாகி அறிவுருவா மவனை யறிய வேண்டும். இதற்கு ஈசுவரன் நிகரில்லா யந்திரமொன்று இசைத்திருக்கிறார். அதுதான் "மனித தேஹம்." இந்த தேஹத்தை விட்டு வேறு யந்திரங்கள் செய்து அஃதால் அந்த வான்சக்தியைப் பிடிக்கப்பார்ப்பது வீண்காரியமே.

* * *

"உடம்பினைப் பெற்றபயனாவதெல்லாம் உடம்பினில் உத்தமனைக்காண்"—என்று ஔவையார் அருளிச் செய்துள்ளபடி பிண்டாண்டமாகிய இந்த உடம்பில்தானே புருஷோத்தமனாகிய அவனைக் கண்டு அவன்மூலமாய் அவனது மாயாசக்தியாகிய வான்சக்தியை யோகவித்தியால் உணர்ந்துய்ய வேண்டும். இதற்கு சாதனம் தனுகரணபுவனபோகம். சாதகம் சரியை, கிரியை, யோகம், ஞானம். சாதனமின்றிச் சாதிப்பாரில்லை. சாதகமின்றி சாதனம் பயன் படாது.

* * *

சூரியனைக்கொண்டு உலகை நடத்தும் உத்தமனொருவனிருக்கிறான். அவனுக்குக் கிழக்கு மேற்கு என்கிற வித்யாஸமில்லை. அவன் தன் மாயையால் ஜகத்தையுண்டுபண்ணி அண்டபிண்ட மென்கிற யந்திரங்களை நிர்மித்துப் பிராணசக்தியால் அவற்றை ஓயாமல் ஓட்டிக் கொண்டே யிருக்கிறான். அவன் லோகக்ஷேமார்த்தமே உழைக்கிறான்.

"அண்டபிண்டம்"—*Macrocosm and Microcosm.*

"அண்டபகி ரண்டங்களு மாயதவ னருளாலே
அண்டத்திற் பிண்டம்போல் பிண்டத்தி லண்டமாம்
அண்டமும் பிண்டமு மாயவதரித்த காரணனை
அண்டபிண்ட மாயறிவர் பகிர்-அகமுகப் பார்வையா
[லே."

"பகிர்-அகமுகப்பார்வை"—*Experiment: objective and Subjective.*

"பார்வை யிரண்டுண்டு: பகிர்-அகமுகமென்பார்;
பார்வை பகிர்முகம் பரந்துவுலகா ராய்ந்தால்;
பார்வை யகமுகமுள்ளுணர்வை யோர்ந்துணரில்;
பார்வை யிரண்டுமொன்றுவதுணரார் பரிதவித்துழல்
[வாரே."

"விருதாவார்த்தை"—*Vain Protests.*

"பரிதவித்துழல்கின்றார் பாரிலுள்ள சீவர்கள்காண்
பரிந்துபல பேசுவர் பாரைச்சீர் திருத்தென்பர்
அரிதறிந்துணரவோ ஆர்வமுமில்லை யென்பர்
அரிதரிதுகொடுமையிது! அநியாயமிதுவென்பாரே."

"அகம்பாவக்கூத்து"—*Vanity Fair.*

"என்பாரே யவர் எல்லாமறிந்தவர்போல்
வன்பேச்சுப் பேசுவர் வான்மேற் பழிபோட்
டுன்பேச்சுக் கேளேனுண்மையு முணரவல்லேன்
என்பேச்சுக்கேட்டேநீ யிவ்வுலகையிரக்ஷியென்பார்."

"அகச்செருக்கு"—*Vanitas Vanitatum.*

"இரக்ஷியென்பார் கக்ஷிபேசிக் காலமும்போக்கிடுவார்
இரக்ஷிப்பானுளனொருவன் உனக்கேன் கவலையென்
[றால்
இரக்ஷிப்பானிரக்ஷித்தால் இத்தனைபேரிரப்பானேன்
[பர்
இரக்ஷிப்பானைநோவரிரந்திறப்பான்குற்றமோாரே"

"அசிரத்தை"—*Want of Faith.*

"ஓராரேயுண்மையில் உள்ளதொரு காரணத்தைத்
தாராரே தம்முயிரைத் தரணியுள்ள சீவர்கட்கு
ஓரா துணரா தொருநிலையாய் நில்லாதுனர்
சாராது பார்த்துணரச் சார்பின்றித் தவவிக்கிறாரே."

"அதர்மம்"—*Stifling of Conscience.*

"தவிக்கிறா ரேயவர் தன்னுணர் வின்றியே
அவிக்கிறா ரேயவர் அகவிளக் கொளிதனை
தவிக்கிறா ரேயவர் தரணியிற் பிறந்துமையே
கவிழ்க்கிறா ரேயவர் காயமா மோடந்தன்னை."

மேற்றிசையார் "வான்சக்தி"யைப் பிடித்து வண்டியிற்கட்டும் மாடு குதிரைகள்போல் அதை யந்திரத்தில் கட்டியோட்டப் பார்க்கிறார்கள். ஓட்டலாம் என்பதுண்மை. ஆனால் ஓட்டுவார் ஓட்டினால் ஓடுமேயன்றி "அகவிளக் கொளிதனை" அவித்துவிட்டுப் "பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகள்" ஓட்டி

ஞல் அது ஓடுமோ? ஓடாது! ஓடாததன்றி ஓட்டப்பார்ப்பவனையும் கர்மசக்ரத்தில் நன்ருய் மாட்டுவிக்கும்.

*　　*　　*

"The Free Energy of Space" என்று சொன்னதின் மூலசக்தியைத் தான் யோகிகள் உமை யென்று உபாஸித்துத் தொழுகிருர்கள். அவள் வான்சக்தியாய் விளங்கும் பொழுது சியாமளேயாய் இருதயகமலத்தினுள்ளிருக்கும் தஹராகாசத்தில் (சிறு ஆகாசத்தில், சிற்றம்பலத்தில்) ஆனந்த நடனம் புரிந்து கொண்டிருக்கிருள். ஜடசக்தியா யிருக்கும்பொழுது பர்வத ராஜன் மகளாய் உற்பவித்து விளங்குகிருள்.

"வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்த மலே வளர்காதலிப்பெண்உமையே" என்றுபெரியோரும் பாடியுள்ளதால் உணர்க.

———:++:———

## The Self-Executive Nature of the Eternal Law.

## கர்மமே கொல்லுவிக்கும்.

———:(*):———

"கர்மமப்பா கொல்வதுன்னைக்
கனமோகம் கெடுப்பதுாஉம் காண்."

தருமமே தலேக்காக்கும் மென்பது எப்படியுண்மையோ, அப்படியே கர்மமே கொல்லுவிக்கும் என்பதும் உண்மையே. கர்மம் என்ருல் செய்வினே. செய்வினே திருந்தச் செய்யாவிட்டால் அது தீவினையாகும். தீமை விதைத்தால் தீமையே தான் விளேயும். அப்படியிருக்க, நல்லவர் துன்பத்துக்காளாவதும், கெட்டவர் அக்கிரமத்தின்மேல் அக்கிரமம் செய்து கொண்டு வாழ்வதும் இவ்வுலகில் சகஜமாயிருப்பது ஏன்? ஏன்று கேட்கலாம். அதர்மம் அதிக்கிரமித்து மிஞ்சினுல் தான் தர்மம் தலேயெடுக்கும். ஏனெனில் தர்மஸம்ரக்ஷகரான பகவான் ஹிருதய கமலவாசியாக எல்லார் ஹிருதயத்திலும் அந்தர்யாமியா யிருக்கிருர். அந்தர்யாமியா யிருக்கப்பட்ட அந்த விஷ்ணு சக்தியானது விசுவரூபியாகி விசுவரூபத்தின் ஸ்வரூபமான அவதார புருஷனுக வேண்டும்.

நல்லபொன்னே உலேயில் வைத்தூதித் தட்டினுல் தான் பணியாகும். அதேமாதிரி நல்ல ஹிருதய முடையவர்கள் பொறுக்க முடியாத பொறுமை காட்டித் துன்பத்தை யனுபவித்தால் தான் அந்தர்யாமியாயுள்ள பகவான் பிரசன்னமாவார்.

"சிதக்னிகுண்டஸம்பூதா—தேவகாரிய ஸமுத்யதா" என்ற இரகஸியநாமார்த்தப்படி அறிவாகிய அக்னிகுண்டத்திலிருந்து உண்டாகும் தேவியானவள் தேவகாரியத்தின் பொருட்டு உருவெடுத்துத் தோன்றுகிருள். அவளுடைய திருவுருவங்களேயும் அவதாரங்களேயும் சொல்லி முடியாது.

தர்மத்துக்குள்ளே தர்மகாரணமாயும் காரியத்துக்குள்ளே கர்மபலனுகவும் (வினைப்பயனும்) இருக்கிருள்.

"அடாது செய்தவர் படாது படுவர்" என்பது உண்மை. ஆனுல் அடாபிடிச் செய்கை வர வர அதிகமாகி வருகிறதே யென்ருல், அதுவும் கர்ம தர்மமே. வித்துப் போட்டால் அது முளேயாய், இலேயாய், கிளேயாய், செடியாய், மரமாய், பூத்துப் பிஞ்சுவிட்டுக் காய்த்துப் பின்னர்தான் பழுக்கும். அந்தப் பழத்தினுள்ளே யிருக்கும் வித்தில் தான் மரம் முற்றும் அடங்கி ஒடுங்கியிருக்கும். அஃதேபோல அக்கிரமம் செய்வார் செய்கை தழைத்தோங்கி வளர்ந்தால் தான் அக்கிரமத்தின் பலன் அவர்களுக்கு சித்திக்கும்.

கர்மம் கொல்லுவிக்கும். தர்மம் தலேகாக்கும். ஆகையால் தர்மவான்கள் கர்ம வசத்தால் அதர்மம் செய்கிறவர்களே "ஆந்தனேயும்" காக்க வேண்டும். ஏனெனில் கர்ம பலனேத் தடுக்க அவர்களால் முடியாது. ஆகையால், சாந்தனே

யுந் தீயனவே செய்திடினும்'' அறிவுடையோர், "ஆந்தனையும்" அவரைக்காப்பர். இது ஜீவ சாருண்யத்தின் லக்ஷணமாம்.

கர்மம் செய்தவனைக் கோர்ட்டார் பிடித்துத் தண்டிக்க வேண்டியதில்லை. ஏனெனில் கர்ம தர்மம் தானே அவனைப்பற்றிப் பிடித்திழுத்து வினைப்பயனை யூட்டுவிக்கும். "நன்மை விளைத் தால் நன்மை விளையும்: தீமை விளைத்தால் தீமை விளையும்." "நன்மையும் தீமையும் தான் தர வருமே."

ஆகையால் தீயோனிடத்துக் கருணை பாவி ப்பதே அறிவுடையோர்க் கழகாம். தர்ம சபை யிலிருந்து ஒரவஞ்சகத் தீர்ப்புச் சொல் வோர் கதி, அம்மம்மா! சொல்லி முடியாது. யாவர்க்கும் மனதை யடக்சல் அரிது. அதிலும் அரிது அடக்கிய மனதைத் திராசு முனைபோல் நடுவு நிலை தவறாது வைத்திருப்பது. கோபதாப முதலான மனக்குற்றங்களுடையோர் மனதை நிதானமாக வைத்திருப்பது முடியவே முடி யாது. நிதானம் தப்பினுல் மெய் பொய்போ லும் பொய் மெய்போலும் மனப் பிராந்தியால் பேதப்பட்டுத் தோன்றும். "இருண்டவன் கண் ணுக்கு மருண்டதெல்லாம் பேய்'' என்பது போல, நிதானமற்ற மனதிற்கு எல்லாம் விகா தமாகவே தோன்றும். என்ன சொல்லினும் உண்மை பேருது. பொய்யைத் தள்ளி மெய் யைத் தழுவுவதற்கான திண்மையும் பொருந் தாது. ஆகையால் மனதை நடுவு நிலையில் வைக்காதார் செய்த தீர்ப்பெல்லாம் அநர்த் தம் விளைப்பதாகவே யிருக்கும். இதற்கு உதாரணமாக "கழுவுக்கேற்ற கோமுட்டி" கதையைச் சொல்லி "கழுவுக்கேற்ற கோமு ட்டி நியாயம்'' என அதற்குப் பெயரு மிட்டி ருக்கிருர்கள் பெரியோர்.

காகம் உட்காரப் பனம்பழம்வீழக் 'காகதாளி நியாயத்தால்' காரண்காரிய தோரணையினுண் மையுணராது ஒன்றை யொன்றின் மேலேற்றி விகாதம் செய்வதுபோல் நிதானம் தப்பின மனதுக்கு உண்மை யுணர்வ தறிதாகி, ஏதோ ஒருவனைத் தண்டிக்க வேண்டுமென்கிற பாவ னையால், குணமொடு குற்றம் இன்னதென்று ஆராய்ந்து பொய்யைத்தள்ளி மெய்யைத் தழு வும் விவேகசக்தி யில்லாமற்போய்விடும். விவே கமழிந்தால், மனமாயைவந்து மூடிக்கொள் ளும். மனமாயையினுல் மனக்குழப்ப முண் டாகும். மனம் குழம்பினுல் புத்தி தடுமாறும். வேண்டிய தெளிவு ஏற்படாது. அப்பொழுது எவனையாவது ஒருவனைத் தண்டிக்க வேண்டு மென்கிறபாவனையே காரணமாக உண்மையுண ர்வதில் சிந்தைதரிக்காது "கழுவுக்கேற்ற கோமுட்டி'' யாரென்றுமட்டும் உணர அவா க்கொண்டிருக்கும். அதன் விவரம் பூர்வ காலக் கதையாகச் சொல்லப்படுவதுண்டு.

ஒரு திருடன் புதிதாய்க்கட்டிய ஒரு வீட்டில் கன்னக்கோல் வைத்துத் திருட நுழைந்தான். ஈரச்சுவராகையால் கன்னவாசலில் நுழைகை யில் அவன்மேல் அது உட்கார்ந்துபோய்விட் டது. திருடன் அகப்பட்டுக்கொண்டான். தன் திருட்டுக்குற்றம் வெளியாகாதபடி அவன் ஓடோடியும்போய் அரசனிடம் முறையிட்டுக் கொண்டான். அரசன் வீட்டுக்காரனை வரவ ழைத்து என் ஒருயிருக்கு அபாயம் விளையும் படி சுவருகட்டினுய்? என்று கேட்டான். வீட் டுக்கு சொந்தக்காரன் அரசனுடைய அறியா மைத்தனத்தையுணர்ந்து திருடன்மேல் திருட் டுக்குற்றம் ஸ்தாபிக்கமுயன்ருல் அரசன் கேளா னென்று சுவர்வைத்த வேலைக்காரன்மேல் பழி போட்டான். அவன் மண் குழைத்துப்போட்ட சிற்ருள்பேரில் பழிபோட்டான். அவன் தெ ருவோடு போன ஒரு தேவடியாள் பேரில் பழி போட்டான். அவள் தான் கொடுத்த நகை யைக்கொடுக்காது இழுக்கடித்த தட்டான்மேல் பழி போட்டாள். தட்டான் அந்நகையைத் தான் ஈடுவைத்த கோமுட்டிபேரில் பழிபோட் டுத் தான் தப்பித்துக்கொள்ளவேண்டி 'அவன்

தான் அதர்மவட்டி வாங்கித்தின்னு கொழுத்திருக்கிறான். அவனே கழுவுக்கேற்ற கோமுட்டி' யென்றுசொல்ல, அரசன் அந்தக் கோமுட்டியை அழைத்துவர உத்தரவு செய்து அவனைப் பார்த்ததும் அவன் பருத்துக்கருத்து தொந்தியும் தொப்பையுமாய் கழுவுக்கேற்ற கோமுட்டியா யிருக்கிறான் என்பதை உண்மை யென்று அறிந்துகொண்டு அவனைக் கழுவி லேற்றும்படி உத்தரவளித்து விட்டான். திருடப்போன திருடன் மதியின்மையால் ஈரச்சுவரில் கன்னம் வைத்து அகப்பட்டுக் கொண்டதற்காக கோமுட்டி "கழுவுக்கேற்றவன்" என்கிற காரணம்பற்றிக் கழுவி லேற்றப்பட்டான்.

அவனைத் தண்டித்த அரசன் அறிவீனன் என்பதில் சந்தேக மில்லை யானாலும், கோமுட்டி ஏழைகளைப் படுத்திய பாடெல்லாம் திரண்டுருண்டு பழிபாவமாகி அவனைக் கழுவுக்கேற்ற கோமுட்டியாகச் செய்தது என்பதிற் சந்தேக முண்டோ? அரசன் அறிவீனனாகித் தன் கடமையைச் செய்யத் தவறினாலும், கோமுட்டியின் அதர்ம கர்மம் அவனைக் கொல்லுவித்தது அல்லவா?

இப்படித்தான் கர்மதர்மம் மூடரையும் கொண்டு தன் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளும். பிரகிருதிதர்மம் மனுஷனுடைய சிற்றறிவுக்குக் கட்டுப்பட்டதில்லை. அதனுண்மையை அறிந்து அந்த தர்மவழிப்பட்டு நடப்பானாகில் அது அறிவுருவாகி அவனுக்குப் பேரறிவைக் கொடுக்கும்.

——:(*):——

## Easy Readings from Early English History.

### 1. The Story of Queen Boadicea.

### ஆங்கிலேய பூர்வ சரித்திரக் கதைகள்.

---

#### 1. ராணி போடீஷியா.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னே இப்பொழுது இங்கிலீஷ்காரர்களுக்கு சுதேசமாயிருக்கும் மஹாபிரிட்டனானது† மிகவும் தாழ்ந்த ஸ்திதியில் இருந்தது. இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இப்பொழுதிருக்கும் பெயரையே அப்பொழுது தரித்திருந்தாலும் அக்காலத்தில் பிரிட்டனென்னும் தேசம் ஒன்று இருக்கிறதென்பதே உலகத்துக்குத் தெரியாது.

பிரிட்டனுக்கு அதிதூரத்தில் ரோமர்கள் ராஜ்யத் தலைநகரமாகிய **ரோம்** என்பது இருந்தது. அக்காலத்தில் அவர்கள் யுத்தத்தில் பெயர்பெற்றிருந்ததுமன்றி அநேகமாக எல்லா தேசங்களையும் ஜெயித்திருந்தார்கள். கடைசியில் அவர்க்ள் பிரிட்டனையும் தங்கள் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ள வேண்டுமென்கிற பேரவாக்கொண்டு நூற்றுக்கணக்காக கப்பலில் பெரிய் சேனை யொன்றை அனுப்பிவைத்தார்கள். பிரிட்டன் தேசத்தார் தைரியமாக எதிர்த்தாலும் ஒற்றுமை இல்லாதிருந்தனர். அச்சிறிய தேசத்தில் ஜனங்கள் பலவித கூட்டங்களாகப் பிரிவினைப்பட்டிருந்தார்கள். ஒவ்வொரு கூட்டத்தையும் அக்கூட்டத்தைச் சேர்ந்த ஒரு அரசன் அதை அரசாண்டு வந்தார்.

இக்கூட்டங்களில் ஒன்றாகிய ஐஸினி கூட்டத்தார் இப்பொழுது * நார்பொக், சப்பொக் எனப்படும் ப்ரதேசத்தில் வசித்து வந்தார்கள். அக்கூட்டத்தின் அதிபதி ரோமர்களோடு உடன்படிக்கைசெய்து கொண்டான். அவன் இறந்துபோனபொழுது தனது பூஸ்திதியிலும் பணத்திலும் பாதி ரோமர்களுக்கும், இன்னொருபாதி தனது மனைவியாகிய ராணி போடீஷியாவுக்கும் கொடுத்துவிட்டுப் போனான்.

அவன் அப்படிச் செய்வதினால் ரோமர்கள் தன் குடும்பத்தையும், ஜனங்களையும் பாதுகாப்பார்களென்று நினைத்தான். ஆனால் ரோமர்கள் பேராசை பிடித்தவர்களாய் மிகவும் குரூரமாய்

---

* Norfolk, Suffolk.

† மஹாபிரிட்டன் என்பது இங்கிலாண்டு, வேல்ஸ் ஐர்லண்டு மூன்றும் சேர்ந்தது.

நடந்துகொண்டார்கள். தங்களுக்கு கொடுக்கப்பட்ட சொத்துக்களோடு திருப்தி அடைந்திராமல் ரோமர்கள் ராணி பொடீஷியாவின் பாகத்தையும் எடுத்துக்கொண்டு பொடீஷியாவையும் அவருடைய பெண்களையும் அடித்து தொந்தரவுசெய்து அவனது பிரஜைகளை மிகவும் வருத்தினார்கள்.

ராணி பொடீஷியா அவர்களுடைய நன்றிகெட்ட நடத்தையினால் மிகவும் கோபமுற்று தன் பிரஜைகளை கூட்டக்கூட்டி அவர்களிடம் ரோமர்களுடைய நடத்தையைப்பற்றிச் சொன்னாள். அவர்கள் அதைக் கேட்டதும் உடனே கோபமுற்று அவர்கள் மேல் படை எடுக்க அவாக்கொண்டார்கள்.

ரோமர்கள் அநேக பட்டணங்கள் கட்டியிருந்தார்கள். அவைகளில் கோல்செஸ்டர், (Colchester) (லண்டன் London,) ஸெய்ன்ட் அல்பான்சு (St Albans) என்னும் மூன்று பட்டணங்களின் பேரிலும் ஐஸினி கூட்டத்தார் படை எடுத்தார்கள். அந்த சமயத்தில் ரோமப் படைவீரர்கள் இன்னொருபாகத்தில் இருந்தார்கள். ஐஸினி கூட்டத்தாரை எதிர்க்கக் கிழவீரர்கள் தவிர வேறுயாரும் இல்லை. அதனால் ஐஸினி கூட்டத்தார் அவர்களை முறியடித்து வீடுகளுக்கு நெருப்பு வைத்ததுமன்றி எதிரில் அகப்பட்ட ஸ்திரீகள், குழந்தைகள் முதலியோரையும் கொலை செய்யத் தலைப்பட்டனர்.

ரோம சேனாதிபதி இதைக் கேட்டதும் உடனே புறப்பட்டுவந்தார். ராணி பொடீஷியா அதைக் கேட்டதும் இப்பொழுது (Epping Forest) எப்பிங் பாரஸ்ட் என்னுமிடத்தில் கூடாரமடித்தாள். சீக்கிரத்தில் இருபக்கத்தாரும் சண்டைக்குத் தயாராயினர். யுத்தம் தொடங்குவதற்கு முன் பொடீஷியா கையில் ஒரு ஈட்டி தாங்கி தான் அரசியென்று காட்டும் தங்கப்பட்டை யொன்று தரித்து யுத்த ரதத்தில் எறிக்கொண்டு தன் ஜனங்களைப் பார்த்து "ஜனங்களே! நீங்கள் ரோமர்களின் அடிமைகளாக இருக்க விரும்புகிறீர்களா? அல்லது யதேச்சையாய் இருக்க விரும்புகிறீர்களா? அவர்களுக்கு பயப்படாதீர்கள். அவர்கள் மிகவும் கொஞ்சம்; நீங்கள் அவர்களவ்வளவு தைரிய சாலிகள்" என்றாள்.

இவ்வார்த்தைகள் ஜனங்களுக்கு உத்ஸாகத்தைக் கொடுத்தது. அவர்கள் எதிரியைத் தோற்க அடிக்கலாமென்று தைரியமாய் இருந்தார்கள். அந்த தைரியத்தினால் தங்கள் ஸ்திரீகளையும், குழந்தைகளையும் வண்டிகளில் வேடிக்கை பார்க்கும் பொருட்டு யுத்த பூமியைச் சுற்றி நிறுத்தி யிருந்தார்கள். ஆனால் கடைசியில் ஐஸினி கூட்டத்தார் தோற்கடிக்கப் பட்டார்கள். அவர்கள் தப்பித்துக் கொண்டுபோக முடியாமல் அவர்கள் நிறுத்தியிருந்த வண்டிகள் தடுத்தன. அதனால் ரோமர்கள் எதிரிகளையும் அவர்கள் ஸ்திரீகள், குழந்தைகள், அவர்கள் கால்நடைகள் முதலியவைகளையும் கொன்றார்கள். கடைசியில் ராணி பொடீஷியாவின் கதிதெரியவில்லை. அவள் விஷத்தை தின்று உயிரை மாய்த்துக் கொண்டாளென்று சொல்லப்படுகிறது.

இந்த சண்டைக்குப் பிறகு ரோமர்கள் ஐஸினி கூட்டத்தாரை மிகவும் கொடுமையாக நடத்தினார்கள். அக்கொடுமைக்கு அவர்கள் அடங்காததினால் பிறகு அன்பாக நடத்தினார்கள். அன்புடன் நடத்த ஆரம்பித்த பிறகு ஐஸினி கூட்டத்தார் ரோமர்களுக்குக் கீழ்ப்படிந்ததுமன்றி அவர்கள் தங்களுடைய மதங்களை விட்டுக் கிறிஸ்தவ மதத்தை அனுசரித்தார்கள்.

## ஸ்ரீ சங்கரர்.

### முடிவுரை.

இப்பிரபுவிற்குப் பின் பிர்ம்மாவின் அவதாரமாய் மண்டன பண்டிதர் என்ற நாமத்தோடிருந்த சுரேஸ்வராசாரியார், எண்ணூறு வருஷகாலம் சாரத பீடத்தைப் பூஜித்துக்கொண்டிருந்தார். இவருக்குப்பின் எட்டாவது பீடாதிபதியாக வந்து 105 வருஷ காலம் ஜீவித்திருந்த வித்யாசங்கரர் என்ற ஜகத்குரு, முந்தி ஸ்ரீ சங்கரர் காஞ்சிபுரத்தில ஸ்தாபித்த காமகோடி பீடத்தில் ஒரு சிஷரையும், கோதாவரி தீரத்தில் புஷ்பபுரி என்ற விடத்தில் ஒரு பீடத்தை ஸ்தாபித்து ஒரு சிஷரையும் அதிகாரியாக்கினுரென்றும், பின்பு பீடாதிபதியாக விருந்த ஒரு ஸ்வாமிகள் கும்பகோணத்திலும் ஸ்ரீ காசி முதலிய விடங்களிலும் ஒரு பீடத்தையும், மடத்தையும், சிஷரையும், ஏற்படுத்தினுர்களென்றும் பெரியோர் கூறத் தெரிய வருகிறது. ஜகத்குரு பாரம்பரியத்தை இத்துடன் ஒரு அட்டவணையாக சேர்த்து இருப்பதுடன் முப்பத்தி மூன்ருவது தலைமுறையாக ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு பீடஸ்தானத்தை யடைந்து தற்காலம் வரையில் பீடாதிபதியா யிருந்த ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த சிவசுபிநவநரசிம்ம பாரதிஸ்வாமிகள் அவர்கள் பாத சந்நிதானத்திலும் தற்காலத்தில் பீடாதிபதியாக விருக்கும் சந்திரசேகர பாரதியவர்கள் பாத சந்நிதானத்திலும் பரிபூர்ணமான பக்தியை நாட்டி வணங்கி ஸ்ரீ சாரதாம்பாள் சமேத சந்திர மௌளீஸ்வரரை மனே வாக்குக் காயங்களால் நமஸ்கரித்து, இச்சரித்திரத்தை பக்தி மேலீட்டால் எழுதியதை அலக்ஷியஞ் செய்யாமல் படித்தும் கேட்டும் சிரவணம் செய்கிறவர்களுக்கு இகத்தில் இஷ்ட காமிய சித்தியையும், பரத்தில் சாயுஜ்யத்தையும் அருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

ஓம் தத்ஸத்.

ஸ்ரீசங்கரர் விக்கிரம சகம் 14-ம் ஆண்டில் நிகழும் ஈஸ்வர ஞூ வைகாசி மீ சுக்கில பஞ்சமியில அவதரித்தார். அதாவது 1952 வருஷமாகிறது.

| எண். | பெயர். | இருந்தகாலம் ஞூ |
|---|---|---|
| 1 | ஸ்ரீ ஆதிசங்கரர் | 32 |
| 2 | சுரேஸ்வரர் | 800 |
| 3 | நித்தியபோதகர் | 90 |
| 4 | ஞானகனர் | 94 |
| 5 | ஞானேத்தம சிவாசாரியார் | 48 |
| 6 | ஞானகிரியர் | 86 |
| 7 | சிம்மகிரியார் | 62 |
| 8 | ஈஸ்வரதீர்த்தர் | 69 |
| 9 | நரசிங்கதீர்த்தர் | 83 |
| 10 | வித்யாசங்கரர் | 105 |
| 11 | பாரதி கிருஷ்ண தீர்த்தர் | 5[illegible] |
| 12 | வித்தியாரண்ணியர் | 55 |
| 13 | சந்திரசேகா பாரதியார் | 41 |
| 14 | நரசிங்க பாரதியார் | 41 |
| 15 | புருஷோத்தம பாரதியார் | 42 |
| 16 | சங்கராநந்தர் | 26 |
| 17 | சந்திரசேகரபாரதியார் | 23 |
| 18 | நரசிங்கபாரதியார் | 24 |
| 19 | புருஷோத்தம பாரதியார் | 50 |
| 20 | இராமசந்திர பாரதியார் | 55 |
| 21 | நரசிங்க பாரதியார் | 33 |
| 22 | நரசிம்ஹ பாரதியார் | 46 |
| 23 | நரசிம்ஹபாரதியார் | 44 |
| 24 | நரசிங்கபாரதியார் | 40 |
| 25 | அபிநவ சச்சிதானந்த பாரதியார் | 81 |
| 26 | நரசிங்கபாரதியார் | 42 |
| 27 | சச்சிதானந்தபாரதியார் | 40 |
| 28 | அபிநவசச்சிதானந்தர் | 40 |
| 29 | அபிநவ நரசிங்கர் | 44 |
| 30 | சச்சிதானந்த பாரதியார் | 53 |
| 31 | அபிநவ சச்சிதானந்தர் | 44 |
| 32 | நரசிம்ஹ பாரதியார் | 83 |
| 33 | நரசிம்ஹபாரதியார் | 55 |
| 34 | சந்திரசேகர பாரதியார் | தற்கால பீடாதிபதி |

குறிப்பு.—இந்த அட்டவணையில் சில பீடாதிபதிகள் ஜகத்குரு பீடத்தை யடைந்த வருஷத்திலிருந்து முக்தியடைந்த வருஷம்வரை கால வரையறை கிடைக்காததால் அவர்கள் ஜீவித்திருந்த காலத்தைக் குறித்திருக்கிறது. ஆகையால் சில விஷயங்களில் கணக்கு மொத்தம் ஒத்து வராது.

T. C. வெங்கட்டரமணையர்.

—:(*):—

## Lalitambal—VII. Betrayal.
## லலிதாம்பாள் சரித்திரம்.
### 7-இரண்டகம்.

"பத்தினி, பக்தர்கள், தத்துவஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றின்மாய்ந்திடும்
சத்தியமீது சதாநந்தி யாணையே."—

—திருமந்திரம்.

முற்பகல் விதைக்கிற் பிற்பகல் விளையும். வினை வீண்போகாது. கர்மத்தைச் செய்தால் அதன்பயனை அனுபவித்தே தீரவேண்டும். எள்ளுவிதைத்தால் கொள்ளு முளைக்குமா? பூசினிபோடப் புடல்முளைக்குமா? வித்தொன்றுபோட முளையொன்று முளைக்காது. போட்டவித்தேதான் முளைக்கும். இது கர்மதர்மம். நன்மை விதைத்தால் நன்மை விளையும். தீமை விதைத்தால் தீமை விளையும். நன்மை தீமையிரண்டிற்கும் வித்தாயிருப்பது கர்மம். வித்திலிருந்து முளைகாண்பது கர்மதர்மம். தர்மம் என்பதை மர்மமறிந்துணரல் வேண்டும். தர்மத்தின் மர்மம் ஸத்தியம். தர்மம் என்பது அழியாத் தன்மையது. ஆதலால் அதை ஸநாதன மென்பர்.

குரு-சிஷ்ய முறையில் குரு வென்பவர் இருட்டை (மனவிருளை) ப்போக்குபவர். சிஷ்யன் என்பான் சிக்ஷைக்குட்பட்டவன். சிக்ஷை யென்றால் நற்பழக்கம். நல்வழி யுபதேசமும் கேட்டு அவ்வழியில் நடக்கப் பழகுதல் சிக்ஷையாம். அப்பியாச விசேஷத்தால் பரோக்ஷமாய் அறிந்ததை அனுபவரீதியாய் அபரோக்ஷமா யறியக் கங்கணம் கட்டிக்கொண்டு சிரவண மனனத்தாலுணர்ந்ததை நிதித்தியாசனத்தால் சாக்ஷாத்கரிக்க முயலுதல் தீக்ஷை யென்னப்படும்.

"எண்ணித் துணிவது கர்மம், துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு."

என்றிருப்பதால் அனுபவஞானம் பெறத் துணிந்தவன் சந்தேக விபரீதங்கள் அறக் கற்றவனாயிருக்கவேண்டும். சந்தேகம் சிரவணத்தினாலும், விபரீதம் மநநத்தினாலும் நீங்கும். இவ்விரண்டுக்கும் இன்றியமையாதது குருபக்தி. இந்த குருபக்தி யில்லாதவன் செய்முயற்சி ஆபத்தே விளைக்குமன்றி உண்மையை விளக்காது. ஏனெனில் "மாயையென்பது மருளும் தெருளும்" என்றிருப்பதால், குருவினது அருள் நோக்கமில்லாவிட்டது மனமாகிய மாயை அறிவைமயக்கும் தன்மையதாம். தெளியச்செயினும் பாசிமூடிய குளத்தில் பாசியை நீக்கினும் அது பின்னும் வந்து மூடிக்கொள்வதுபோல், மனத்தினிருள் நீங்குவதுபோல் காட்டி பின்னும்வந்து மூடிக்கொள்ளும். ஆகையால் அகத்தூய்மை யில்லாதவிடத்து சிரவண மனனம் நற்பயனைக் கொடுக்காது. மனம் என்பது ஜடம். அறிவு அதில் பிரதிபிம்பிப்பதனுல் அதற்குச் சித்விலாஸ முண்டாகிறதேயன்றி, வேறுபடியல்ல. அந்த அறிவை விற்று அடிமை கொள்ளப் பார்க்கிறவர்கள் பேதைகளேயன்றி வேறல்ல. ஏனெனில் "சித்திலாது ஜீவனில்லை யில்லை இல்லையே!"

அஹம் என்பது ஆத்மசக்தி. அது ஹம்ஸரூபமானது: அப்படியென்றால் "அஹம் ஸ:" "நான் அவன்" என்கிற பாவனத்தோடு கூடியது. அறிவாகிய பாலை அறியாமையாகிய நீரிலிருந்து பிரித்துண்ணும் சக்தி வாய்ந்தது. "நான் அவன்" என்றால் நிரஹங்காரியாகிய

அவனையும் அஹங்காரியாக பாவிக்கும் தோஷம் வருமாதலால், "நானவன்: அவன் நான்"—"ஹம்ஸோஹம்" என்கிற அபேத பாவனையால் அபேததரிசனம் காணும் ஸ்வபாவமமைந்தது. இதற்கு "தாதாத்மய சக்தி" யென்று சொல்கிறது. "சிவோஹம்" என்கிற பாவனு யோகத்தால் சிவமேயாகிற "அஹம்," "தேஹோஹம்" என்கிற பாவனுயோகத்தால் தேஹமேயாகும் சக்திவாய்ந்துளது. அழியாத வஸ்துவாகிய அஹம் அழியுந்தன்மைவாய்ந்த தேஹமாவது எப்படி? யென்று கேட்கலாம். அதுதான் மாயாசம்பந்தத்தா லுண்டாகிறது.

"மாயையென்பது மருளும் தெருளும்
தெளிந்தார்க்கிலதாம் தெளியார்க்குளதாம்."

என்றிருப்பதால், அதைப்போக்க ஒரேவழியுண்டு. அதுதான் குருவரப் பிரஸாதம். அந்த மாயையின் இயல்புதான் என்னுவெனில்,

"உளதாமதுவு முள்ளத்துட்டானே
உள்ளத்துணர்வை மறைத்திடுமெதுவும்
மறைவழிப்பட்டு மனந்தெளிந்தக்கால்
இருந்தவிடந்தெரியா தெடுத்திடுமோட்டமே."

"ஓட்டமெடுக்கு முண்மையுணர்ந்தார்க்கது
வாட்டமிகச்செய்யு முண்மையுணாரர்க்கது
வாட்டமும் ஆட்டமும் வாயுமனமாகும்
ஆட்டியும் காட்டியும் ஆள்பவன் எந்தையே."

இப்படி யிருப்பதால் "தாய்க்கொளித்த சூலில்லை" யென்பதுபோல, "குருவுக்கிரண்டான சிஷ்யனில்லை." குரு வேறு சிஷ்யன் வேறு என்று நினைத்தால் உடனே வந்தது அநர்த்தம். குரு கருணைமிகுதியால் அருட்தேகமாம் தன் திருமேனியைச் சிஷனுக்குக் கொடுத்து இருட்தேகமாம் அவன் மனதைத் தனக்கு இருப்பிடமாகச் செய்துகொள்கிறார். ஆகையால்தான் சிஷ்யன் குருசிஷ்ருஷை செய்ய வேண்டுமென்பது. அப்படிச் செய்யாது அவன் "இரண்டகம்" நினைத்து பேதபாவனையால் குருவைக் காட்டிக் கொடுப்பானாகில் அவன் குருத் துரோகம் செய்தவனுகிறுன். அவனுக்கு நேரும் கதி திருமூல தேவர் திருமந்திரத்தில் சொல்லி யிருக்கிறபடி மேலே யெடுத்துக் கூறியிருக்கிறோம்.

குரு ஸ்தானத்திலிருக்கத்தக்கவர் (1) பத்னி, பதிவிருத மனுஷ்டித்து ஸித்தி பெற்ற பத்தினிகள்; (2) பக்தர்கள், ப்ரபக்தியினுல் கடவுளைத் தம்மிதயத்தில் கண்டு இடை விடாத அன்பு பூண்டொழுகுமவர்; (3) தத்துவஞானிகள், தத்துவ தரிசனம் கண்டவர்கள் ஆகிய மூவகைபட்டவர்களாகச் சொல்லி யிருக்கிறார்.

பத்தினி பதிசிஷ்ருஷையினுலே கடைத்தேறினவள். பக்தர் பாவனுயோகத்தால் கடைத்தேறினவர்கள். தத்துவஞானிகள் யோக ஸம்யம ஸித்தியால் கடைத்தேறினவர்கள். இம்மூவர்களும் குருஸ்தானத்திலிருக்கத் தக்கவர்கள். அதாவது, மன இருளைப் போக்க வல்லவர். இம்மூவர்க்கும் மாயை மயக்கமில்லை.

மாயையை வென்றவர்களிடத்து அபேத பாவனுயோகத்தால் அவர்கள் அருள் பெற்றுப் பிழைக்கலாமேயன்றி, பேதபாவனையால் அவர்களுக் கிரண்டகம் நினைத்துப் பிழைக்க நினைப்பது பேராபத்தாக முடியும். ஏனெனில் மாயையானது அவர்களைப் பாபத்தில் வீழ்த்திவிடும். இவர்களுடைய அத்தமும் (ஐசுவரியமும்) ஆவியும், ஜீவ வாழ்க்கையும் ஒரு வருஷக் கெடுவில் மாய்ந்துவிடும்; இருப்பதுபோல் காட்டி இல்லாமற்போகும். இதற்கு உதாரணம் எத்தனையோ பிரத்தியக்ஷத்தில் காணலாம்: ஆனுலும் அதைப்பற்றி இங்கு வளர்த்திக்கூற நிமித்தமில்லை. 1911ஞ நவம்பர்மீ முதல் 1912ஞ நவம்பர் மீ 20உ வரையில் நடந்த விருத்தாந்தங்களை நினைக்கில் இதனுண்மை உள்ளத் துறுத்துவதாயிருக்கிறது. சென்ற வருஷத்தோடு இந்த அனுபவம் சம்பூர்ணமானபடியால் இனி விட்ட சரிதையைத் தொட்டுத் தொடர்ந்து எழுதலாகு மென்று ஆரம்பித்தோம். அதற்கு அத்தாக்ஷி லலிதாம்பாள் "தானுறையும்" "சிந்தாமணிக்ரஹ தரிசனம்" ஸ்தூல சூக்ஷ்ம காரணத்திலும் தந்தருளியதேயாம்.

———

# DAYANANDAR.

(A Detective Novel.)

Chapter I.

An Extraordinary Crime.

## தயாநந்தர்.

ஒரு துட்பறியும் கதை.

——:(*):——

### அத்தியாயம் I.

ஒரு ஆச்சரியமான குற்றம்.

முன் காலத்தில் தயாநந்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் தொழில் புஸ்தகங்கள் போடுவது. மற்றவர்கள்போலத் தானுய் கற்பனை பண்ணுமல் தினமும் நடக்கும் விஷயங்களில் ரஸியம் பொருந்திய ஒன்றை எடுத்துக்கொண்டு அதைப் புஸ்தகமாகப் போடுவார். அவர் எழுதுவது உண்மையில் நடந்தவையாய் இருப்பதால் அவைகள் போலீஸ் கோர்ட் வர்த்தமானங்கள்போலத் தோன்றும் தயாநந்தர் சென்னையில் ஒரு பங்களாவில் குடி இருந்தார். அவர் காலையில் வேலை செய்வதும் மத்தியானத்தில் தூங்குவதும் சாயங்காலத்தில் வேலை செய்யாமல் காற்று வாங்கிக்கொண்டு இருப்பதும் வழக்கம். இரவு 12 மணியிலிருந்து காலை 5 மணி வரைக்கும் தனியாகப் பட்டணத்தில் இருக்கும் எல்லா மூலை முடுக்குகளையும் சுற்றிப்பார்த்து விட்டு வருவார். அவரை அப்பொழுது பார்த்தால் பரம ஏழைபோல் பிச்சைக்காரவேஷம் தரித்திருப்பார்.

ஒருராத்திரி தயாநந்தர் நல்லஉடைகள் உடுத்திக்கொண்டு வசந்த உத்யானவனத்தண்டை நின்றுகொண்டிருந்தார். வசந்த உத்யான வனத்துக் கருகிலிருந்த கடியாரம் அப்பொழுது 12 மணி அடித்தது. அருகிலிருந்த நாடகக் கொட்டகையில் வேடிக்கை பார்த்துவிட்டு ஜனங்கள் வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். அரைமணி நேரத்திற்கெல்லாம் கிட்டத்தட்ட எல்லாக் கூட்டங்களும் கலைந்துவிட்டன. அநேகமாய் எல்லாக் கடைக்காரர்களும் அவர்கள் கடைகளை மூடிவிட்டார்கள்.

இந்த சமயத்தில் தயாநந்தருடைய பார்வை ஒரு செந்தலைச் சடையன்மேல் விழுந்தது. ஆள் பருத்திருந்தான். அவன் மயிரும் தாடியும் முழு சிவப்பாய் இருந்தன. அவன் நல்ல ஆடைகள் உடுத்திருந்தான். அவன் முகம் அவன் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தான் என்பதைக் காட்டிற்று. அவன் தயாநந்தர் பக்கமாய்ப் போவதும் அவருக்கு அருகிலிருந்த ஒரு போலீஸ் சேவகனிடம்பேச வாய்திறப்பதும் உடனே ஒன்றும் பேசாமல் அருகில் திறந்திருந்த ஒரு கடைவாயருகில் போய் நிற்பதுமாயிருந்தான். அம்மனிதனுடைய நடத்தையானது தயாநந்தரின்மனதில் ஒரு சந்தேகத்தை உண்டாக்கிற்று. தயாநந்தர் அவன் யாராயிருக்கலாமென்று யோசித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அம்மனிதன் வசந்தரிடம் வந்து தயவுசெய்து தாங்கள் இருளப்பன் சந்து இருக்குமிடத்தை எனக்குச் சொல்லமுடியுமா என்று கேட்டான்.

"அது அருகாமையில்தான் இருக்கிறது. உமக்கிஷ்டமானுல் நானே அழைத்துக்கொண்டு போகிறேன்."

"வந்தனம். அது எங்கிருக்கிறதென்பதை சொல்ல"

"என்னுல் சொல்லமுடியாது. அதற்கு சந்து பொந்துகளின் வழியாய் போகவேண்டும். உம்மால் கண்டுபிடிக்க முடியாது. என்னிடம் அவநம்பிக்கையாயிருந்தால் அந்த போலீஸ்காரனை அழைத்துக்கொண்டு போகச்சொல்லும்."

அம்மனிதனுக்கு மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. கூடவந்த தயாநந்தரை "கல்விமான் என்று நம்புகிறேன்" என்றுன்.

"நீரும் கல்விமான்தான் என்று சொல்லலாமென்று நினைக்கிறேன். இருளப்பன் சந்து இதற்கு இடது பக்கத்தில் இருக்கிறது. நான் போய் வருகிறேன்" என்றுர் தயாநந்தர்.

"ஐயா, ஐயா, நில்லும். நான் உம்மை நம்புகிறேன்; என்னை அந்த இடத்துக்கு அழைத்துக்கொண்டுபோம்" என்றுன்.

உடனே தயாநந்தரும் அந்தப்புதுமனிதனும் வாய் திறக்காமல் நடக்கலாயினர். புதியவர் தயாநந்தருக்குகொஞ்சம் தூரத்திலேயே வந்துகொண்டிருந்தார். அவர் கையானது அவர் சட்டையின் உள்பைக்குள் இருந்தது. அவரைப்பார்த்தால் குற்றஞ்செய்தவனைப்போலிரா

மல் உயர்ந்தநகைகளைத் தன்னோடு கொண்டுபோகிறவர்போல் தோன்றிற்று. அன்றியும் அவர் மாறுவேடம்பூண்ட ஒரு கனவான்போல தோன்றினார். இருவரும் பல சந்துகளில் நுழைந்து கடைசியாய் இருளப்பன் சந்துக்கருகில் வந்து சேர்ந்தார்கள். அருகில் வந்ததும் தயாநந்தர் "இருளப்பன்சந்தென்பது இது தான். இதில் நீர் தனியாய்ப்போவது யுக்தமல்ல. நானும் கூட வருகிறேன்" என்றார்.

"வேண்டாம், வேண்டாம், இருளப்பன் சந்து எங்கிருக்கிற தென்பதுதான் எனக்குத் தெரியவில்லை. அதைக் காண்பித்து விட்டீர்கள்! அதுவே போதும்."

"ஆனால் நீர் அந்த சந்திற்குள் போகவில்லையா?" என்றார் தயாநந்தர்.

"இல்லை, இல்லை, நான் வீட்டிற்குப் போகிறேன்" என்று சொல்லி அவர் அருகிலிருந்த வண்டிகள் நிற்குமிடம் சென்றார். அங்கு மூன்று வண்டிகள் வரிசையாய் நின்றுகொண்டிருந்தன. அவைகளில் முதல் வண்டிக்காரனிடம் சென்று ஏதோ சில வார்த்தைகள் சொல்லி அவனிடம் கொஞ்சம் பணத்தைக் கொடுத்து அதில் ஏறி உட்கார்ந்துகொண்டு கதவைச் சாத்திக்கொண்டார். அந்த வண்டிக்காரன் ஒரு ஐந்து நிமிஷம் குதிரைக்கருகில் நின்றுகொண்டு அதைத் தட்டிக்கொடுத்து கடிவாளத்தை சரிப்படுத்திக்கொண்டிருந்தான். பிறகு அவன் தன் ஸ்தானத்திலேறி யுட்கார்ந்துகொண்டு வண்டியை ஓட்டிச் சென்றான்.

உடனே தயாநந்தர் இரண்டாவது வண்டிக்கருகில் சென்று அதில் ஏறிக்கொண்டு முதல் வண்டியைப் பின்தொடர்ந்தார். உன் கூலி ஒரு ரூபாய் என்றார். அந்த வண்டிக்காரன் ஆச்சரியப்பட்டு "யஜமான் காரியம் எப்படிப்பட்டதோ" என்று கேட்டான்.

வசந்தர் போலீஸ் காரிய மென்றார்.

முதல் வண்டி பல சந்து பொந்துகளின் வழியாய் நுழைந்து கடைசியில் முன் இருந்த இடத்துக்கே வந்து சேர்ந்தது. தயாநந்தர் இறங்கி அந்த வண்டிக்குள் எட்டிப் பார்த்தார். வண்டியில் யாரும் இல்லை. தயாநந்தருக்கு ஆச்சரியமாய்ப் போயிற்று. வண்டிக்காரனை விசாரித்தார். அவன் அவர் ஒரு கதவுவழியாய் நுழைந்து இன்னொரு கதவு வழியாய் இறங்கிவிட்டார். இறங்கும்பொழுது தெருச்கோடியில் வந்திருக்கும்படிக்கும் அங்கு தான் வந்திருப்பதாயும் சொன்னார். நீங்கள் பின் தொடர்ந்து வருவதைப் பார்த்து நான் இன்னும் கொஞ்ச தூரம் போய்விட்டு இங்கு வந்தேன். அவரை இங்குவந்து எடுத்துக்கொண்டுபோக வந்தேன். அவரைக்காணோம். நான் வீட்டிற்குப் போகிறேன் என்றான். பிறகு இன்னொரு வண்டிக்காரனும் தயாநந்தரும் அவனைத் தெருக்கோடியில் பார்க்கவேண்டுமென்று போனார்கள். போகும்பொழுது தயாநந்தர் மூன்றாவதுவண்டி அங்கு இல்லையென்பதைக் குறித்துக்கொண்டார். தெருக்கோடியில் வந்ததும் வண்டிக்காரன் ஒரு பிரேதத்தின்பேரில் இடறி விழுந்தான். தயாநந்தர் அதை விளக்கு வெளிச்சத்தில் பார்த்தார். அந்தப் பிரேதம் அந்தப் புது மனிதனுடையதாயிருந்தது. அவன் மார்பில் சத்தியால் குத்தப்பட்டிருந்தான்.

---

## Ladies' Page—Chastity.

### ஸ்திரீகள் பக்கம்—கற்புநிலைமை.

:(o):

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்."

என்னும் குறளில் ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் மனையாளினும் உயர்வாகிய பொருள் எவை இருக்கின்றன? அவளிடத்தே கற்பென்னும் கலங்காநிலைமை இருக்கப் பெற்றால்; என்று திருவள்ளுவநாயனார் திருவுளம் பற்றினமையால் உலகத்தில் பெண்களாய்ப் பிறந்தவர்கள் தமக்குரிய நாண், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நால்வகைக் குணங்களும் எஞ்ஞான்றும் மனதைப் பலவிடத்திலும் செல்லவிடாது நிறுத்திக் கற்புநிலை கெடாதிருக்க வேண்டும்.

அந்நாற்குணங்களில் நாணமென்பது சங்கோசம்; மடமென்பது எல்லாம் அறிந்தும் அறியாததுபோல் இருத்தல்; அச்சமென்பது காணாததைக் கண்ட விடத்தஞ்சுதல்; பயிர்ப்பென்பது கணவரல்லாதவர் கை மேற்படின் அருவருத்தலாம்,

விவாகம் இல்லாமல் கன்னிகையாக இருக்கும் பருவத்தில் தாய் தந்தையர் ஆதீனத்திலும், விவாகமான பின் கணவர் ஆதீனத்திலும், கணவற்குப் பிற்காலம் புத்திரர் ஆதீனத்திலும், புத்திரர் இல்லாவிட்டாற் சகோதரர் ஆதீனத்திலும் இருக்க வேண்டுமே அல்லாமல் ஒருபோதும் பெண்கள் சுவாதீனப்பட்டு இருக்கலாது.

கொண்ட கொழுநனை மேன்மையாகப் பாவித்து அவன்சொல்லைத் தடுக்காமல், அவனுக்குக் கீழமைந்து பக்தி விநயத்துடனே "பொய் சொன்ன வாய்க்குப் போஜனம் கிடையாது" என்பதனாற் பொய் பேசாமல் கறந்த பால் கறந்தபடி அவன் விஷயத்தில் உண்மையாய் ஊசியும் சரடும்போல மனைவி அவன் கருத்தின் வழி ஒழுகல்வேண்டும்.

பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்பொழுது பிதா வித்தியா சாதூரிய முள்ளவனுக்கு கொடுக்க வேண்டுமென்றும், தாயானவள் மகள் ஐசுவரியவானுக்கு வாழ்க்கைப்பட வேண்டுமென்றும், சுற்றத்தார் நல்ல குலஸ்தன் வந்து வாய்க்க வேண்டுமென்றும் அந்தப் பெண் அழகிற் சிறந்தவனை நாம் வரிக்கவேண்டும் என்றும் நினைக்கிறதுண்டு; ஆயினும் அது அப்படியே வாய்க்குமா? தெய்வச் செயலின்படி அல்லவோ சம்பவிக்கும்.

"குலமகட் கழகு தன் கொழுநனைப் பேணுதல்" என்பதனால் தன் புருஷன் அழகிருந்த ஊரில் குடியிருந்தறியாத குரூபியாயிருந்தாலும் அவனை நவ மன்மதனாகவும், என்றும் அசாத்தியரோக முடையவனாயிருந்தாலும் அரோக திடகாத்திரனாகவும், அவள்நம்பி நான்தான் எனக்கொன்றும் வராது என்றவனைப் போல் வயிற்றைக் கிழித்து பார்த்தால் வாடையுங் கிடையாத நிரட்சரகுட்சியாயிருந்தாலும் கல்விக் களஞ்சியமாகவும், பாண்டவர்களை நானறியேனா, கட்டிற்கால் போல மூன்று பெயரென்று வாயினாற்சொல்லி இரண்டு விரல்காட்டி ஒருகோடு கிழித்தவனுக்கு குறைந்தவனென்றெண்ணும்படி, கணக்கறியாத நிர்மூடனாயிருந்தாலும் சேஷசாயிபோல நிபுணனாகவும், உண்ணச் சோற்றுக்கும் கட்டக் கந்தைக்கும் கதியற்று, அடுப்பிற் பூனைதூங்க, கையில் அரைக்காசுக்கும் வழியில்லாத அஷ்டதரித்திரனாக இருந்தாலும் குபேர சம்பத்து உடையவனாகவும், கொக்குப்போல நரைத்து கண் குழிந்து பல் விழுந்து வில்லைப்போல் வளைந்த முதுகுடைய கிழவனாயிருந்தாலும், நல்ல யவ்வன முடைய விடனைப்போலவும் பாவனைசெய்து அவனை அவமதியாமல் அனவரதம் பேணி நடக்கவேண்டும். கல்லென்றாலும் கணவன் புல்லென்றாலும் புருஷன் என்கிறார்களே. (இவையெல்லாம் லக்ஷியம். குன்றாலக்ஷியமுடைய பதிவிரதைக்கு இப்படி நடத்தல் சாத்தியமாமேயன்றி வஞ்சக நெஞ்சுடை மாதர்க்கு சாத்தியமில்லை. வஞ்சகநெஞ்சை வெல்லும் வழியிதுவென்றுணர்ந்தால், இதிலுள்ள கோணலெல்லாம் நேராய் விடும். வி-சி-பர்.)

மனைவியானவள் கணவனுக்கு தாதிபோலப் பாத பணிவிடை செய்பவளும், மந்திரிபோல சமயோசித மறிந்து நல்லாலோசனை சொல்பவளும், ஸ்ரீமகாலட்சுமிபோலப் பெண்ணைப்பெண் இச்சிக்கத்தக்க அதிரூப சௌந்தரியவதியாயும், பூமாதேவியைப்போல சலியாத பொறுமையுடையவளும், வேசியைப்போலப் பர்த்தாவைச் சரசகேளி விநோதத்தால் பிரியப்படுத்துகிறவளாயு மிருப்பதன்றி, அன்போடு தாய்போல இனிய உணவுகளாற் போஷிக்கின்றவளாயுமிருக்கவேண்டும். "தாய்க்குப்பின் தாரம்" என்று உலகம் சொல்லுகின்றதல்லவா?

ஒருவேளை கணவன் கோபித்தால் தானும் கூடக் கோபியாமல் அவன் தனக்கு அனுக்கிரகித்ததாகவும், அவன்வைதால் அவனைத்தானும் வைதிடாமல் தன்னை அவன் வாழ்த்தினதாகவும், அவன் கைச்சேஷ்டை முதலிய தீமைகளைச் செய்தாலும் அவைகளை அப்படி நினையாமல் புருஷன் சரசத்தால் செய்த தாடனங்களாகவும்நினைத்து சாந்தத்தோடும் அவனருகில் வந்து, கை எப்படிநோகின்றதோ! பாதம் எப்படி உளைகின்றதோ! என்று அவனுக்கு இதஞ் சொல்லி அவன் கோபத்தைத் தணிக்கவேண்டும். அவ்வாறு இதஞ்செய்தால் அவன் பொல்லாத மூர்க்கனானாலும் அவனுடைய கல்லான நெஞ்சங்கரைந்து பரமசாது ஆவான் அல்லவா?

"வல்லிடிவழக்கைச் சொல்லடிமாமி" என்று மாமியுடனே வாதுசெய்யாமல், அவளைத் தாய்

போலக்கருதி அவள் காலிலே பட்டது தன் கண்ணிலே பட்டதாகக் குடும்ப பாரத்தையெல்லாம் ஏந்திக்கொண்டு மாமியாரும் கண்மணியாகிய என் செல்வ மருமகளைப்போலத் தேடினாலும் கிடைக்குமா என்று சொல்லும்படி நடந்து "மாமியார் மெச்சிய மருமகள் இல்லை" என்னும் பழமொழியைப் பொய்யாக்கவேண்டும்.

இவள் எங்களுக்கு மருமகளா! அல்ல; எங்கள் குலதெய்வமே இப்படி உருக்கொண்டு வந்ததென்று மகிழும்படி மாமனாரைத் தந்தைபோல பூசிக்கவேண்டும்.

கணவனுடைய சகோதரர்களை பேதமாய் எண்ணாமல் பரிபாலிப்பதனால் அவர்களில் மூத்தவர்கள் இவள்தான் எங்கள் சகோதரியென்றும், இளையவர்கள் எங்களைப் பெற்ற தாயென்றும் கொண்டாடும்படி செய்யவேண்டும். அவர்களுடைய மனைவிமார்கள் தன்னுடைய உசித குணத்தைக்கண்டு இவள் பெண்கள் நாயகம், பெண் பாத்திரம், பெண்கள் பூஷணம், பெண்கள் மாணிக்கம், பெண்ணாரமுதமென்று ஸ்துதி செய்யும்படி அவர்களைச் சகோதரிகளைப்போல பாவித்து அவர்களுடனே கலகமில்லாமல் நேசிக்கவேண்டும்.

நாத்தன்மார்களையும் வரிசைவண்மை தவறாமல் அவர்கள் இந்தப்பாக்கியவதிபோலப் பெண்கள் எங்கும் காணக்கிடையார்களென்று சொல்லும்படி நன்றாய் உபசரிக்கவேண்டும்.

அடிக்கடி அண்டைவீடு அயல்வீட்டிற்குப் போகலாகாது. எவ்விடத்திற்காவது யாதொரு நிமித்தத்தால் அவசியம் போகவேண்டியிருந்தால் சிறிய பெண்குழந்தையாயினும் வழித்துணையாக கூட்டிக்கொண்டு போகவேண்டுமே அல்லது தனி வழி நடந்து தண்டுமாரியாய்த் திரியலாகாது.

"ஒரு பெண் பேசினால் பூமி அதிரும்; இரண்டு பெண் பேசினால் நக்ஷத்திரம் உதிரும்; மூன்று பெண் பேசினால் கடல் கதறும். நான்கு பெண் பேசினால் உலகம் யாதாகுமோ" என்பதனால், யாருடனும் இடி இடித்ததுபோல் உரக்கப் பேசாமல் குயில் கூவுதல்போல் இனியகுரலாக கிளி கொஞ்சுவதுபோல் மிருது பாஷியாய் வசனிக்க வேண்டும். பெண்கள் இருப்பிடம் பெரிய சண்டை என்கிறார்களே.

"தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்" என்பதை நினையாமல் நான் வீணே பிண்டமும் துண்டமும் சேர்ந்ததுபோல் "பிடாரியைப் பெண்ணென்று பிடித்துப்பேயனானேனே" இதுவும் என் தலை விதியா! என்று புருஷன் விசனப்படாதபடி, "பழம் நழுவிப் பாலிலே விழுந்தது போலவும் " சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரி பொழிந்ததுபோலவும், ஏதோ பாக்கிய வசத்தால் எளிதில் வாழ்க்கைக்கு நல்ல பெண் வாய்த்தாளென்று மனமகிழும்படி இங்கிதமறிந்து நடக்க வேண்டும்.

(இன்னும் வரும்.)

---

## Children's Page.

### The Close Alliance.

### சிறுவர்க்கான பக்கம்.

### இணைபிரியா ஒற்றுமை.

---

ஒருநாள் ஒரு குடியானவன் தனது எருதுகளோடு உழுகிறதற்காகத் தன் வயலுக்குப்போனான். அவன் அங்குபோய்ச் சேர்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு புலியானது "சிநேகிதா, கடவுள் உன்னை ஆசிர்வதிக்கட்டும். நீ சௌக்கியம்தானா" என்று அவனை யோகக்ஷேமம் விசாரித்தது.

"நான் சௌக்கியம் தான், நீங்கள் எப்படி?" என்று அதைத்திரும்பி யோகக்ஷேமம் விசாரித்தான். அவனுக்கு மனதிற்குள் பீதியானாலும் மேலுக்குத் தைரியமாக இருந்தான்.

"நிரம்ப சந்தோஷம்; பகவான் என்னை உன்னுடைய இரண்டு எருதுகளையும் புசிக்கும்படி அனுப்பி யிருக்கிறார். நீ அவருடைய இஷ்டத்திற்கு இரண்டு சொல்லமாட்டாய் என்று தெரியும். ஆகையால் அவைகளை கட்டவிழ்த்துவிடு, நான் அவைகளைப்புசிக்கவேண்டும்" என்று குதூகலத்தோடு சொல்லிற்று.

"சிநேகிதா, நீ சொல்லுவது நிஜம்தானா. சுவாமி என்னை இந்த நிலத்தை உழுதுக்கொண்டு வரும்படி சொல்லியிருக்கிறார். உழுவதற்கு எருதுகள் வேண்டாமா? ஆகையினால் அவரைப்போய்க் கேட்டுக்கொண்டுவா" என்றான்.

அவன் தன் எருதுகளைக் கொண்டுபோவதற்காகவே யன்றி தனக்கு ஒரு தீங்கும் செய்வதற்கல்ல என்பதைத் தெரிந்துகொண்டு தைரியம் அடைந்தான், "தாமதம்செய்யாதே, இப்பொழுது அதற்கு பொழுதில்லை. நீ எருதுகள் இல்லாமல் திண்டாடவேண்டுமே! என்று விசனமாயிருக்கிறது. ஆனாலும் சிக்கிரம் அவைகளை அவிழ்த்துவிடு, நான் இதோ வந்துவிட்டேன்" என்றுசொல்லிக்கொண்டு அந்தப் புலியானது தனது பற்களையும் நகத்தையும் தீட்டிற்று.

அதற்குக் குடியானவன் தனது எருதுகளுக்கு பதிலாக தனது வீட்டிலிருக்கும் கொழுத்த பசு ஒன்றைக் கொண்டுவந்து கொடுப்பதாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். புலியானது அதற்குச் சம்மதித்தது. உடனே குடியானவன் அந்த எருதுகளை வீட்டுக்கு ஓட்டிக் கொண்டு போனான். தனது கணவன் சீக்கிரம் திரும்பி வருவதைக் கண்டு அவனது மனைவி அவனைச் சோம்பேறி என்று வைய ஆரம்பித்தாள்.

பிறகு குடியானவன் தான் வயலுக்குப் போன பிறகு நடந்த சங்கதிகளை ஒன்றுவிடாமல் சொன்னான். அவனது மனைவி குழந்தைகளுக்கு வெண்ணெய், தயிர், பால் முதலியவைகள் இல்லாமல் போய்விடும் என்றும் ஆகையினால் கறவைப்பசுவைக்கொடுத்து விடக்கூடாதென்றும் அழ ஆரம்பித்தாள். பிறகு சிறிது நேரம் கழித்து தனக்கு ஒரு நல்ல யுக்தி தோன்றி இருப்பதாகவும் அதை நடத்த தனது கணவனது உதவிவேண்டும் என்றும் சொன்னாள். பிறகு அவனைநோக்கி புலியினிடம் தனது மனைவி பசுவை ஓட்டிக்கொண்டு வருவதாகச் சொல்லும்படிசொன்னாள். அவனுக்கு வெறுங்கையாகப் போகப்பிடிக்காவிட்டாலும் தனது மனைவியின் கட்டாயத்திற்காக அங்கு போய்ச்சேர்ந்தான். இவன் வெறும் கையாக வருவதைப்பார்த்து புலியானது "பசு எங்கே?" என்று உருமிற்று. அவன் தன்மனைவி ஓட்டிக் கொண்டு வருகிறதாகவும், அந்தப்பசு முறடென்றும் தன்னால் அதை அடக்க முடியவில்லையென்றும் சொன்னான். இவன் போனபிறகு அவன் மனைவி புருஷவேஷம் தரித்து லாயத்திலிருந்த குதிரைமேலேறிக்கொண்டு வயலுக்குப் போனாள். வயலுக்கருகிலிருந்த ஒரு சந்துக்கருகில் போனதும் சுவாமியைப்பார்த்து பிரார்த்தனை பண்ணுவதுபோல் "சுவாமி, நான் புலிமாமிஸம் சாப்பிட்டு மூன்றுநாளாகின்றது. அப்பொழுது சேர்ந்தாப்போல் மூன்று அகப்பட்டன. இப்பொழுது ஒன்றுவது அகப்படவேண்டும்!" என்று புலியின்காதில் படும்படி சொன்னாள். புலியானது பீதியடைந்து காட்டைப்பார்க்க ஓடிற்று. அங்கிருந்த ஒரு நரியானது இது ஓடி வருவதைப்பார்த்து சங்கதியை விசாரித்தது. புலி சொன்னதைக் கேட்டு சிரித்து "குருடா, அது யாருமில்லை. குடியானவன் மனைவியின் தந்திரம்" என்றது. "நிச்சயந்தானா" என்றது அந்த பயங்கொள்ளிப்புலி "சந்தேகமில்லாமல்" என்றது அந்த திருட்டு நரி. "அப்பா நீ பொய் சொல்லுகிறாய். பார்ப்பதற்கு நிரம்ப பயமாயிருந்தது" என்றதுபுலி.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. உனது இரையை ஒரு ஸ்திரீக்கு பயந்துகொண்டு விட்டுவிடாதே!" என்றது.

"நீ என்னை அங்கு மோசம் செய்து விடலாம்!" என்றது அந்த பயங்கொள்ளிப்புலி.

ஆனால் உன் வாலையும் என்வாலையும் ஒன்றாய்ச்சேர்த்து முடிச்சு போட்டுக் கொண்டுபோகலாம் என்றது.

அப்படியே அவைகளிரண்டும் தங்கள் வால்களைச் சேர்த்து முடிச்சுப் போட்டுக்கொண்டு போயிற்று.

இவைகளிரண்டும் வருவதைக் கண்டு வயலில் தன் மனைவியுடன் சிரித்துக்கொண்டிருந்த குடியானவன் ஐயோ என்று கத்த ஆரம்பித்தான். அவன் மனைவி அவனைச் சும்மா இருக்கச் சொல்லி நரியைப் பார்த்து, "நரியாரே ஓடிப்போனதைத் திருப்பிக்கொண்டுவந்த உமக்கு நிரம்ப வந்தனம்" என்றாள். அதைக்கேட்ட புலி பயந்து காட்டிலும் மேட்டிலும் விழுந்து ஓடிற்று. அதன் வாலுடன் கட்டப்பட்டிருந்த நரியானது தரையில் மோதப்பட்டு இறந்தது. குடியானவனும் அவன் மனைவியும் சந்தோஷமாய் இருந்தார்கள். இப்படியாக முரட்டு பலம் மூடரிடம் செல்லுமேயன்றி புத்திசாலிகளிடத்திற் செல்லாது.

ஓம் தத்ஸத்.

———

## Press Opinions.

"*The Vivekachintamani*".—We congratulate the Vivekachintamani, which is the oldest Tamil Magazine in our midst, on its entering on the twenty-first year of its useful and eventful career. It begins with a characteristic celebration of its twenty-first birthday and has a well thought-out article on the educational Policy of the Government of India as propounded by them in their recent Resolution. It stands for the ideal in actual life and advocates character-building as the chief end of Education. It is much sought by students of vernacular composition who find it of excellent use in their attempt to cultivate a taste for their mother-tongue.—*The Hindu, 16th May 1913.*

"*The Vivekachintamani*".—This, the oldest Tamil magazine in existence, has entered the 21st year with the April number now before us. It begins with a characteristic celebration of "Our Twenty-first Birthday." It consistently stands for the the ideal in education and has an excellent article on the Educational Policy of the Government of India as propounded by the Resolution on the subject recently issued. For good and idiomatic Tamil it stands alone and unrivalled and amid the din and noise of the Battle of the vernaculars now raging round the University regulations, it is quitely doing a great service to the cause of vernacular studies by making the vernacular the vehicle of the highest thoughts of the human mind. It will be a very useful adjunct to the College and secondary schools in their attempts to bring up the subject of vernacular composition.—*The Indian Patriot, 16th May, 1913.*

"The Magazine, is... .....keeping its position as the oldest and best Tamil monthly in Madras."—*The Madras Standard, 13th December, 1912.*

"The Magazine, we are glad to note, is maintaining its unique position as a Journal of recognised spiritual and moral force and we foresee a large scope for its usefulness in the moral and Spiritual line in which it stands foremost. The publishing agency deserve a word of commendation for their zeal in working up the Journal to its original position."—*The Indian Patriot.*

"*The Vivekachintamani*"—The Vivekachintamani is now in its twenty-first year of publication and continues to be edited by Mr. C. V. Swaminatha Iyer, of the Diffusion of Knowledge Agency. It is the oldest Tamil monthly in this Presidency, and as such, deserves to be read widely, specially in view of the high religious and moral ideals which it sets for its readers. The articles are written in a popular and readable style suited to all classes and conditions of readers. The April number has a thoughtful article on the Educational policy of the Government of India as indicated in their recent resolution. There are a few other contributions on popular and interesting subjects, such as "Character building," the secret of Abstinence, "Cocoa-butter, etc."—*The Madras Times, 24th May, 1913.*